# விடா முயற்சி வெற்றிக்கு வழி

வெளியீடு:
சுலைமானியா பப்ளிஷர்ஸ்
மஃமூர் சென்டர், முதல் மாடி,
81, அங்கப்பன் தெரு, சென்னை - 600 001.
போன் : 252 70 550 த. பெ. எண் : 1886

# முன்னுரை

"விடா முயற்சி, வெற்றிக்கு வழி" என்று இந்நூலுக்குப் பெயரிடப்பட்டிருப்பதிலிருந்து விடா முயற்சி என்றால் என்ன, அதன் பலன் யாது என்பதை நீங்கள் ஒருவாறு அறிந்திருப்பீர் களென்று நம்புகிறேன். அந்த விடா முயற்சியை எவ்வாறு மேற்கொள்வது, எவ்வாறு எதிர்த்து வரும் இடையூறுகளை யெல்லாம் எதிர்த்து நின்று முறியடித்து இறுதியில் வாகை சூடுவது என்பதற்குப் பல்வேறு விளக்கங்களுடனும் பெரியார்களின் வாழ்விலிருந்து நற்சான்றுகளுடனும் இந்நூலைத் தயாரித்துள்ளேன். இந்நூல் வாழ்வில் உயர விரும்பும் எவருக்கும் ஒரு சிறந்த வழி காட்டியாக மட்டுமல்லாது அவர்களுக்கு ஊக்கமும் ஊட்டமும் நல்கும் அருமருந்தாகவும் அமையும் என்பதே என் நம்பிக்கை. தமிழ் மக்கள் இதனை படித்து, இதிலுள்ள வண்ணம் செய்லாற்றி வாழ்க்கையில் பெரு வெற்றி காண வேண்டும் என்பதே என் வேணவா.

**அப்துற் -றஹீம்**

பொருளடக்கம்



# பொருளடக்கம்

# விடா முயற்சி
# வெற்றிக்கு வழி

## முயற்சி

மனிதன் வெல்ல வேண்டுமாயின் அவன் இயங்க வேண்டும். செயல்பட வேண்டும். உழைக்க வேண்டும். ஒரு குறிக்கோளை உண்டு பண்ணிக் கொண்டு அதனை அடைவதற்காக முயல வேண்டும். முயற்சியே உலகின் முகத்தையே மாற்றி அமைத்தது. எவரோ முயன்றதன் பலன்கள் தாம் இன்று நாம் நுகரும் அத்தனை வசதிகளும். ஹோமர் முயன்றிராவிட்டால் நமக்கு "இலியட்" காவியம் கிடைத்திருக்காது. திருவள்ளுவர் முயன்றிராவிட்டால் நமக்கு "திருக்குறள்" கிடைத்திருக்காது. எடிசன் முயன்றிரா விட்டால் நமக்கு மின்விளக்கு கிடைத்திருக்காது. மார்க்கோனி முயன்றிராவிட்டால் நமக்கு வானொலிப் பெட்டி கிடைத்திருக்காது. லூயி பாஸ்டர் முயன்றிரா விட்டால் நமக்கு நாய்க்கடி மருந்து கிடைத்திருக்காது.

இப்படி எல்லாப் பொருள்களுமே எவரோ ஒருவர் முயன்றதன் பலன்தான். அவர்கள் மட்டும் முயலாது முழங்காலைக் கட்டிக்கொண்டு இருந்திருப்பார்களாயின் மனித நாகரிகமும் முன்னேற்றமும் முடமாகிக் கிடந்திருக்கு மென்பதில் ஐயமில்லை. முயற்சி மட்டும் இல்லாது போயிருந்தால் உலகில் மலர்ச்சி ஏற்பட்டிராது என்பது உண்மையாகும்.

முயற்சிதான் அதனை ஆற்றிய அவனுக்கும், அவன் வாழ்ந்த அவனிக்கும் அளவற்ற நன்மையைச் செய்ததாகும்.

ஒருவனுக்கு வாழ்வில் வாகை பெற்றுத் தருவது முயற்சிதான். முயற்சி இல்லாதவர் ஒருபோதும் முன்னுக்கு வரமுடியாது. முயற்சியுடையோர் ஒருபோதும் இகழ்ச்சி அடைய இயலாது. அலெக்ஸாண்டர் உலகை வென்றது முயற்சியால் அல்லவா? அரிஸ்டாட்டில் அறிவியல் உண்மைகளைக் கண்டது முயற்சியால் அல்லவா? நெப்போலியன் மணிமுடி தரித்தது முயற்சியால் அல்லவா?

ஓரிரவு நெப்போலியன் மாறுவேடத்தில் படையணிகளைப் பார்வையிட்டு வரும்பொழுது, "நில்; நீ யார் சொல்?" என்று அதட்டினான் படைக் காவலன். அதற்கு, "நான் பிறப்பால் கார்ஸிகன்; தொழிலால் போர்வீரன்; சாதனையால் சக்கரவர்த்தி" என்று அமைதியாகப் பதிலிறுத்தான் அந்த உலக மாவீரன்.

ஆப்ரஹாம் லிங்கன் அமெரிக்க ஜனாதிபதியானது முயற்சியால் அல்லவா? அலெக்ஸாண்டர் ஃபிளெமிங் "பெனிஸிலினைக் கண்டுபிடித்தது முயற்சியால் அல்லவா? அரும்பெரும் சாதனைகள் அனைத்துமே முயற்சியால் ஆற்றப்பட்டவைதாம். நம் வள்ளுவப் பெருந்தகையும் வளம் பெருக்க, வறுமை விரட்டக்கூறும் வழி முயற்சி என்பதுதான். முயற்சி செல்வத்தைப் பெருக்கும். முயற்சி இன்மை வறுமையைப் புகுத்திவிடும் என்பது அவர் வாக்காகும். பொய்யாமொழிப் புலவரான அவர் வாக்கை மெய்ப்பிப்பவை குபேரச் செல்வர்களான ஜான் டி ராக்பெல்லர், ஜார்ஜ் ஈஸ்ட்மன், தாமஸ் லிப்டன், சார்லஸ் ஷ்வாப் ஆகிய இவர்களின் வாழ்க்கையாகும்.

ஜான் டி ராக்பெல்லர் ஓட்டைகள் நிறைந்த சிறு குடிலில் தான் பிறந்தார். அவர் இளம் வயதில் பசி நீங்க உண்டு அறிந்திருக்க மாட்டார். ஒரு நாளைக்கு பதினைந்து மணி நேரம் பண்ணையில் உழைத்தபின் அவருக்குக் கிடைத்த கூலி 75 காசுகள். மணி ஒன்றிற்கு அவர் சம்பாதித்தது ஐந்து காசுகள்தாம். ஆனால் அது கண்டெல்லாம் அவர் மனச்

சோர்வடையவில்லை. வயிற்றிற்கு உணவில்லையே என்பதற்காக அவர் பண்ணையில் வேலை செய்தார்.

பிறகு அவர் பண்ணையை விட்டு விலகி, கிளீவ்லண்ட் என்னும் ஊருக்கு வந்து அங்கிருந்த தொழிற்சாலையில் வாரத்திற்கு மூன்று டாலர் சம்பளத்தில் ஏவலாளராக இருக்கும்போது தொழில் நுணுக்கங்களைக் கண்டறிந்தார். தாமும் உலகப் பெரும் செல்வராக வேண்டும் என்னும் விருப்பம் அவருக்கு அங்கு வைத்துத்தான் ஏற்பட்டது. விரைவில் அவர் மாதத்திற்கு இருபத்தைந்து டாலர் சம்பளத்திற்கு ஹெவிட் அன்ட் டட்டில் என்னும் தொழிற்சாலையில் சேர்ந்தார்.

சில மாதங்கள் சென்றபின் ஆண்டொன்றிற்கு ஆயிரம் டாலர் சம்பளப் பதவி அவரைத் தேடி வந்தது. அது குழாய்கள் விற்பனை செய்யும் தொழில் நிலையமாகும். அப்பொழுதுதான் அமெரிக்காவில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்ட செய்தி வெளிவந்தது. உடனே ராக்பெல்லருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. குழாய் வாணிபத்தில் இருந்தவர் அல்லவா? "ஏன் நாம் எண்ணெய் வாணிபத்தில் இறங்கக்கூடாது?" என்று எண்ணினார். தம் எண்ணத்தை நிலைய உரிமையாளரிடம் கூறினார். அவருக்கு ராக்பெல்லரின் ஆலோசனை பிடித்துப் போய்விட்டது. இருவரும் சேர்ந்து பங்காளிகளாக எண்ணெய் வாணிபம் செய்யத் தொடங்கினார்கள்.

விரைவில் அவரின் பங்காளி அவரை விட்டு விலகிச் சென்றுவிட்டார். ராக்பெல்லர் தாமே முயன்று "தி ஸ்டாண்டர்ட் ஆயில் ட்ரஸ்ட்" என்னும் தொழில் நிலையத்தை நிறுவலானார். அந்தத் தொழில் நிலையத்தின் மூலம் தான் ராக்பெல்லர் கோடி கோடியாய்ப் பொருள் குவித்து, கோடி கோடியாய்ப் பொருள் ஈந்தார்.

ஜார்ஜ் ஈஸ்ட்மெனும் தம் முயற்சியால் முன்னேறியவர் தாம். அவர் பிறந்ததும் ஏழைக் குடும்பத்தில் தான். வயிற்றுப் பிழைப்புக்காக அங்குமிங்கும் அலைந்து திரிந்த அவருக்கு பேங்கொன்றில் கிளார்க் வேலை கிடைத்தது. அந்த

வேலையிலிருந்தால் முன்னேற முடியாது என்று தோன்றவே அவர் அங்கிருந்து விலகி படம் பிடிக்கும் தொழிலையும் (Photography) கற்கலானார். புதுவகைப் படம் பிடிக்கும் கண்ணாடியைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று விரும்பி அது பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார். அப்பொழுது ஆங்கிலச் செய்தித்தாள் ஒன்றில் அது பற்றிய குறிப்பொன்றைக் கண்டார். அதைவைத்து ஆராய்ச்சியைத் தொடர்ந்து செய்து படம் பதிக்கத்தக்க பொருள் ஒன்றைக் கண்டுபிடித்தார். ஆனால் இந்தப் பொருள் கோடைக் காலத்தில் பயன்பட்டாலும் குளிர் காலத்தில் அவ்வளவு நன்றாகப் பயன்படவில்லை என்றும் படங்கள் அதில் நன்கு பதியவில்லை என்றும் குறை கூறப்பட்டது.

ஈஸ்ட்மென் மனம் நைந்தாலும் மனம் தளரவில்லை. அதனை அபிவிருத்தி செய்வதற்கான ஆராய்ச்சியில் ஈடுபடலானார். இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும் போது தான் படம் பதிக்கத்தக்க தாளைக் கண்டுபிடித்தார். இந்தக் கண்டுபிடிப்பு படம் பிடிக்கும் தொழிலிலேயே ஒரு பெரும் புரட்சியை உண்டு பண்ணியது. இப்போது அறிவியல் அறிஞர் எடிஸனின் நட்பு இவருக்குக் கிடைத்தது. இருவரும் கலந்து ஆராய்ச்சி செய்து செல்லுலாயிட் தாள் படங்கள் செய்யும் முறையைக் கண்டு பிடித்தனர். அதுவே சினிமா தொழிலுக்கு அடிகோலியது. படம் பிடிக்கும் பெட்டி கண்டுபிடித்து அதனை அபிவிருத்தி செய்தார் ஈஸ்ட்மென். அவர் செய்த கொடாக் படம் பிடிக்கும் பெட்டி உலகெங்கும் பிரபலமாகியது. ஈஸ்ட்மெனை நோக்கிச் செல்வ ஆறு புரண்டோடி வரத் தொடங்கியது.

ஈஸ்ட்மென்னைப் போன்று ஏழை குடியில் பிறந்தவர்தாம் தாமஸ் லிப்டனும், ஸ்காட்லண்டிலுள்ள கிளாஸ்கோ நகரில் பிறந்த இவர் அமெரிக்காவின் செல்வத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு பொருள் தேட அங்கு புறப்பட்டார். அமெரிக்காவில் அவர் செய்த முதல் தொழில், பத்திரிகை விற்கும் தொழில் தான். இந்தத் தொழில் பசி தணிக்க உதவியதே ஒழிய பணம் சேர்க்க உதவவில்லை. எனவே, தென்

கரோலினாவுக்கு சென்று அங்குக் கழனி வேலையில் அமர்ந்தார். அந்த ஊர் தட்ப வெப்பநிலை அவர் உடல் நலனுக்கு ஊறு செய்வதாயிருந்ததால் எப்படியோ மூன்றாண்டுகளை அங்குக் கழித்து விட்டு மீண்டும் நியூயார்க்குக்கே வந்து சேர்ந்தார். அங்கிருந்து தாம் பிறந்த ஊருக்கே கிளம்பி விட்டார். அங்கு நண்பர்கள் சிலர் சேர்ந்து நூறு பவுன்கள் திரட்டி அவருக்குக் கொடுத்துதவினர். அதை வைத்து ஒரு கடை திறந்தார். அந்தக் கடைக்கு லிப்டன் கடை என்றும் பெயரிட்டார்.

விளம்பரத்தால் பொருள் விற்பனையைப் பெருக்கலாம் என்பதைக் கண்டறிந்து அதன்படி செய்து பெரும் பயன் அடைந்தவர் அவர்தாம். விளம்பரம் மிக, வாணிபமும் வளர்ந்தது. தாம் பெற்ற நூறு பவுனைத் தந்தவர்களிடம் நன்றியுடன் கொடுத்துவிட்டு வேறொரு வீதியில் மற்றொரு கடை திறந்தார். பொருள்களை வாங்கி விற்பதால் அதிக ஊதியம் அடைய முடியாது என்று கண்டு தாமே பொருள்களை உற்பத்தி செய்யத் திட்டமிட்டார். விரைவில் பல தொழிற்சாலைகள் அவரால் நிறுவப்பட்டன. இலங்கையில் தேயிலைத் தோட்டங்கள் வாங்கினார். இங்கிலாந்தில் பழத் தோட்டங்கள் வாங்கினார். அத்தோட்டங்களில் விளையும் பொருள்களைச் செம்மைப் படுத்திப் பெரும் விளம்பரம் செய்து, தம் கடைகள் மூலம் விற்கலானார். லிப்டன் கோடிச் செல்வரானார். தாம் ஈட்டிய பொருள்களில் பிறர்க்கும் பங்குண்டு என்று நம்புபவராதலால் அறவழிகளில் அள்ளி, அள்ளிச் செலவிடத் தொடங்கினார். இராணி விக்டோரியாவின் பொன்விழாவின் போது ஏழைகளுக்கு அன்னமிட இருபத்தையாயிரம் பவுன் செலவிட்டார். இந்தியாவில் “ப்ளேக்” நோய் தடுப்பிற்காக மற்றொரு இருபத்தையாயிரம் பவுன் ஈந்தார். ஏழைகளுக்கு உணவு விடுதிகள் அமைக்க நூறாயிரம் பவுன் கொடுத்தார்.

தாமஸ் லிப்டனைப்போல் ஏழைப் பெற்றோர்களுக்குப் பிறந்தவர்தாம் சார்லஸ் ஷ்வாப். கல்வியில் ஆர்வம் மிக்கவராயினும் அவர் தொடர்ந்து பள்ளிக்குச் செல்ல

இயலவில்லை. அதற்குக் காரணம் குடும்பத்தின் பொருளாதார நிலைதான். எனவே, பதினாறாவது வயதில் அவர் படிப்பை நிறுத்திவிட்டு, பிழைப்புக்காக வேலை தேடி அலையலானார்; பிராடாக் என்னும் நகரிலிருந்த பல சரக்கு கடையில் அவருக்கு ஒரு வேலை கிடைத்தது. அந்நகரில் ஆண்ட்ரூ கார்னீஜிக்குச் சொந்தமான எ.்.குத் தொழிற்சாலை ஒன்றிருந்தது. அதில் ஒரு வேலை பிடித்திட வேண்டும் என்னும் ஆவல் சார்லஸ் ஷ்வாபுக்கு.

ஒரு நாள் அந்தத் தொழிற்சாலை நிர்வாகி தாம் வேலை செய்த கடைக்கு ஏதோ பொருள்வாங்க வந்தபோது அவரை ஷ்வாப் மிகவும் வினயமாக அணுகித் தமக்கு அவர் தொழிற்சாலையில் ஒரு வேலை தருமாறு வேண்டிக் கொண்டார். அவரின் ஆர்வத்தை அறிந்த தொழிற்சாலை நிர்வாகி அவருக்கு நாளொன்றிற்கு நான்கு ஷில்லிங்குகள் கூலி பெறும் வேலை ஒன்று கொடுத்தார். ஆறாண்டு முடிவதற்குள் ஷ்வாப் தொழில் நுணுக்கங்களைக் கண்டறிந்து தொழிற்சாலை மேற் பார்வையாளராக ஆனார். அவரின் கீழ் ஏழாயிரம் தொழிலாளர்கள் வேலை செய்யலாயினர். அப்பொழுது அவருக்கு வயது இருபத்து நான்குதான்.

விரைவில் "ஹோம்ஸ்டெட் ஸ்டீல் ஒர்க்ஸ்" என்னும் தொழிற்சாலையைத் தாமே நிறுவி நிர்வகிக்கத் தொடங்கினார் ஷ்வாப். என்றாலும் அவர் கார்னீஜி தொழிற்சாலையை விட்டு விலகவில்லை. விரைவில் கார்னீஜி தொழிற்சாலை அனைத்தையும் நடத்துபவராக ஆனார். ஒரு பெரிய வேலை நிறுத்தத்தை வெற்றிகரமாக சமாளித்ததனால் அவர் அனைத்துத் தொழிற்சாலைகளின் தலைவராக உயர்த்தப் பட்டார்.

அவரின் திறமையை அறிந்த ஆங்கிலேய முதலாளிகள் அவரை இங்கிலாந்துக்கு வருமாறு அழைத்தார்கள்; ஆனால் ஷ்வாப் அதற்கு இணங்கவில்லை. ஆண்ட்ரூ கார்னீஜி இதை அறிந்ததும் ஆண்டொன்றிற்கு அவருக்கு பத்து இலட்சம் டாலர் தருவதாக கூறி ஒப்பந்தம் செய்து கொண்டார்.

இதன்பின் அமெரிக்காவிலுள்ள எ..கு வணிகர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து வணிக நிலையம் நிறுவினார்கள். அதற்கு அறுபது இலட்சம் பவுன் முதலிடப்பட்டது. இந்த நிலையத்தின் தலைவராக ஷ்வாப் நியமிக்கப்பட்டார். அப்பொழுது அவருக்கு வயது முப்பத்தொன்பதுதான்.

குடிசையில் பிறந்த இவர்களை கோடிச் செல்வராக்கியது முயற்சிதான். முயற்சி மட்டும் ஆற்றாதிருப்பார்களாயின் இவர்கள் ஏதோ ஒரு மூலையில் எவருக்கும் தெரியாமல் வாழ்ந்து தம் வாழ்வை முடித்துக் கொண்டிருப்பார்கள். முயற்சியால் முன்னுக்கு வந்து, தாம் செய்த தர்மங்களால் உலகின் நன்மதிப்பிற்கு ஆளானவர்கள் இவர்கள் அனைவரும். எனவே, வாழ்வில் வாகையும் வனப்பும் பெற வேண்டுமாயின் நாம் முயன்றாக வேண்டும். இறந்த பின்னரும் நாம் வாழவேண்டுமாயின் நாம் முயன்று அரியன புரிந்தாக வேண்டும். முயன்று வினை முடித்து வாகை பூண்டவர் மட்டுமே காலவெள்ளத்தைத் தம் காலால் உதைத்தெறிந்து மாந்தர் உள்ளத்தில் என்றும் வாழ முடியும்.

முயற்சியே வாழ்விற்கு முடிசூட்ட வல்லதென்று கண்டோம். அந்த முயற்சியை எப்படிச் செய்ய வேண்டும், எப்படிச் செய்தால் அதிகப்பலன் அடைய முடியும் என்பதையெல்லாம் இனி ஆராய்வோம். முயற்சி ஆற்றப் போகும் முன் தாம், நாம் முயலப் போகும் அந்தவினை ஆற்றுதற்கு இயன்றதுதானா என்று நன்கு ஆராய்ந்து பார்த்து கொள்ளவேண்டும். இவ்விதம் செய்வது எதற்கெனில் நாம் ஆற்றப்போகும் வேலை, ஆற்றுவதற்கு இயன்றதுதான் என்னும் நம்பிக்கை நமக்கிருத்தல் அவசியம். ஆற்றமுடியாது என்று நாம் நம்பும் ஒன்றை நாம் ஆற்றத் துணியக்கூடாது. அப்படித் துணிந்தாலும் அதில் நாம் வெல்வது கடினம். காரணம் செயல் வெற்றிக்கு மிகவும் அவசியமானது ஆற்ற இயலும் என்னும் நம்பிக்கை.

ஒரு வேலை இருக்கிறது. அதனை ஒருவர் ஆற்ற இயன்றதுதான் என்கிறார். அவர் சொல்வது போன்று நாமும் அது

ஆற்ற இயன்றது என்று நம்பினால் தான் பயன் உண்டு. அவ்விதம் நம்பவில்லையாயின் அவர் சொன்னார் என்பதற்காகச் செய்யவேண்டாம். ஏனெனில், பெரும்பாலும் அதில் நமக்கு வெற்றி ஏற்படாது. எளிதாய் ஆற்றப்படக் கூடியதாயினும் அதனை ஆற்ற இயலும் என்றும் நாம் நம்பவேண்டியது முக்கியம். அவ்விதம் நாம் நம்பவில்லையாயின் எளிதாய் ஆற்றப்படத்தக்க அந்த வேலையைக்கூட நாம் அவ்வளவு எளிதாய் ஆற்ற இயலாது போய்விடும்.

நாம் தேர்ந்தெடுக்கும் வேலை ஆற்றுவதற்குக் கடினமானதாயிருப்பதில் பாதகமில்லை. ஆனால் அது ஆற்றுவதற்கு முடியாததாக இருக்கக்கூடாது. உலகில் "முடியாத செயல்கள்" என்று சில இருக்கத்தான் செய்கின்றன. அதில் போய் மாட்டிக்கொண்டு மண்டையை உடைத்துக் கொள்ளக்கூடாது. எதையும் "முடியாது" என்று தள்ளிவிடுவது ஆண் மகனுக்கு அழகல்ல. "முடியாது என்னும் சொல் என் அகராதியில் கிடையாது" என்ற நெப்போலியனின் நெஞ்சூக்கம் அவசியம் இருக்கவேண்டியது. அதற்காக இரும்புச் சுவரோடு போய் மோதிக் கொள்ளக்கூடாது. அவன் குளிர் நாடான ரஷ்யாவின் மீது படையெடுத்துத் தோல்வியைத் தழுவிக் கொண்டது போன்று தழுவிக் கொள்ளக்கூடாது.

வெறும் உணர்ச்சிக்கு மட்டும் நாம் இடம் கொடாது அறிவிற்கும் இடம் கொடுத்து நாம் ஆற்றவேண்டிய வேலையைத் தேரவேண்டும். அறிவோடு பயன்படுத்தாத ஆர்வமும், ஊக்கமும் அழிவது உறுதியாகும். எனவே, நாம் தேர்ந்தெடுக்கும் வேலை முடியக்கூடியதா, முடியக்கூடாததா என்பதைவிட அதனைச் செய்ய முடியும் என்று நாம் நம்புகிறோமா, நம்முடைய நம்பிக்கை அறிவின் அடிப்படையில் அமைந்ததா என்பது முக்கியமாகும்.

நாம் தேர்ந்தெடுக்கும் வேலை பற்றிப் பிறரிடம் ஆலோசனை கேட்கலாமா என்று வினவலாம். பிறரிடம் கேட்கவேண்டும் என்று நமக்குத் தோன்றினால் கேட்பதில்

தவறில்லை. ஆனால் பிறர் ஆலோசனையைக் கேட்பதில், அதனைப் பின்பற்றுவதில் நாம் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். ஏனென்றால் நாம் தவறாக வழி காட்டப்படலாம். உலகில் நம்மைவிட அதிக நாட்கள் வாழ்ந்தவர்களுக்கு நம்மைவிட அனுபவமும் அதிகம் இருக்கவே செய்யும். நமக்குத் தெரியாத எத்தனையோ விஷயங்கள் அவர்களுக்குத் தெரிந்தே இருக்கும். எனவே, அவர்களின் ஆலோசனையைக் கேட்பது நல்லதுதான். ஆனால் தீர்மானிக்கும் உரிமை நம்மிடமே தானிருக்க வேண்டும். அதனை அவர்களிடம் ஒருபோதும் ஒப்படைத்துவிடக் கூடாது.

"அப்படியா, தம்பி!" என்று அன்புடன் கேட்டு உண்மையுடன் நமக்கு நல்ல ஆலோசனை கூறக்கூடிய உத்தமர்கள் இல்லாமல் இல்லை. ஆனால், "அதெல்லாம் முடியாது. காரிய சாத்தியமல்ல. வீண்வேலை" என்று கூறி நம்முயற்சியின் முனையை முறிப்பவர் தொகையே உலகில் அதிகம் எனலாம்.

அத்தகைய ஒருவரிடம் போய் நாம் தவறுதலாக ஆலோசனை கேட்டு அவர்களை நாம் நம்பிவிட்டால் நமக்குப் பெரும் பாதகம் நேரிடும் என்பதில் ஐயமில்லை. ஒரு வேலையை அது ஆற்றுவதற்கு இயன்றதுதான் என்று எண்ணி, அது நம்மால் ஆற்றப்படத் தக்கதுதான் என்று நம்பி. "பிறர் ஆலோசனையையும் கொஞ்சம் கேட்டுப் பார்க்கலாமே" என்று எவரிடமாவது நாம் ஆலோசனை கேட்கப்போக அவர் "போங்கள் ஐயா! இதைப் போய்ச் செய்யப்போகிறீர்களே. இதெல்லாம் நடக்கக்கூடிய வேலையா?" என்று கூறிவிட்டால் நம் ஆர்வம் அழிந்து மனமும் தளர்ந்து போய்விடும்.

அதன்பின் எவ்வளவுதான் சமாதானம் கூறினாலும் சில வேளைகளில் நம்மால் மீண்டும் ஆர்வம் கொள்ள இயலாது. இவ்வித நிலை ஏற்படாது பார்த்துக் கொள்ளவேண்டும். பிறர் கூறும் சாதகமான ஆலோசனையோ பாதகமான ஆலோசனையோ நம்மைப் பாதிக்காத அளவு நம் உள

உரத்தை வளர்த்துக் கொள்வோமாயின் மலை மீதிருந்து கொண்டு யானைச் சண்டை பார்ப்பவர்கள் போன்று அவ்வளவு பாதுகாப்புடையவர்களாகி விடுவோம். இவ்வித நிலையே சாந்த நிலையாகும். உயரிய நிலையாகும்.

எவர் எது கூறினாலும் அதனால் ஒரு சிறிதும் பாதிக்கப்படாமல் நாமே நன்கு குறிப்பிட்ட வேலையில் வெற்றி பெறுவதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கின்றனவா என்று ஆராயவேண்டும். அவ்விதம் ஆராய்ந்தபின், "அதனை நம்மால் புரிய முடியும்; அது சாத்தியம்தான்" என்றும் முடிவுக்கு வந்து அவ்விதமே நம்பினால், அந்த நம்பிக்கை நம் உள்ளத்துள்ளே உறுதியாக அமைந்திருக்குமானால் அதனைத் துணிவதில் நாம் காலம் தாழ்த்த வேண்டியதில்லை. அவ்விதம் நாம் நம்பாவிட்டால் அதில் நாம் துளியும் துணியக்கூடாது. ஏனென்றால் நம்மைத் தோல்வி வரவேற்று நிற்கும் என்பது உறுதி.

அறிவோடு ஆராய்ந்து தீர்மானிக்க வேண்டும் என்பதற்காக ஆற்ற விரும்பிய வேலையில் எதிர்ப்படும் இடர், இன்னல்களைப் பெரிதுபண்ணி மனதைத் தளர்வித்துக் கொள்ளக்கூடாது. ஆராயாமல் தேர்ந்தெடுப்பது ஒருவகைத் தீமையானால் இது இன்னொரு வகைத் தீமையாகும். இவ்விதம் எடுத்ததை எல்லாம் அளவுககதிகமான எச்சரிக்கையுடன் சிந்தித்து ஒரு காரியமும் செய்யாதவர்களும் உண்டு. நம் நாட்டிலும் கூட, "அதிகக் கெட்டிக்காரன் சந்தைக்குப் போனால் விற்கவுமாட்டான்; வாங்கவுமாட்டான்" என்பார்கள். இப்படி எடுத்ததெற்கெல்லாம் ஆழமான ஆராய்ச்சியில் இறங்கிவிடக் கூடாது. எந்த வேலைக்கும் சாதகப் பக்கமும் உண்டு. பாதகப் பக்கமும் உண்டு. எச்சரிக்கையுடன் செயலாற்ற வேண்டுமென்பதற்காக அளவுக்கதிகமான ஆராய்ச்சியில் இறங்கி முடிவில் ஒன்றுமே செய்யாமல் இருந்துவிடக்கூடாது.

மொத்தத்தில் எதனையும் "நம்மால் முடியும் சாத்தியம்தான்" என்னும் மன நிலையை நாம் வளர்த்துக்

கொள்ள வேண்டும். அவ்வித நிலையே நல்ல நிலையாகும். உயர்ந்த நிலையாகும். அவ்வித மன நிலையைப் பெற்றிருந்தவர்கள் தாம் உலகையே மாற்றிய பெருமைக்குரியவர்கள் அனைவரும். நெப்போலியனிடம் அத்தகைய நெஞ்சூக்கம் நிறைய இருந்தது. துருக்கி சுல்தான் இரண்டாம் முஹம்மது தாம் செலுத்தி வந்த கப்பல்களையே ஒரு மலைமீது தூக்கிக் கடந்து டார்டனல்ஸில் மிதக்கவிட்டார். பாரசீகத்தில் போரிட்டுக் கொண்டிருக்கும்போது தமக்கு நீந்தத் தெரியாதிருந்தும் புரண்டோடும் ஆற்றில் இறங்கிவிட்டார் அலெக்சாண்டர், நீந்தத் தெரியாதிருந்தாலும் தம்மால் ஆற்றைக் கடக்க இயலும் என்று அவருக்கு அவ்வளவு நம்பிக்கை இருந்தது. அவரின் நம்பிக்கை வீண் போகவில்லை. அவர் ஆற்றையும் கடந்தார்; அன்றையப் போரையும் வென்றார்.

இரண்டாவது உலகப்போர் நடந்து கொண்டிருந்த போது சர்ச்சில் ஒரு முக்கிய விஷயமாக ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிடம் ஒரு தூதனுப்ப எண்ணினார். அதற்குத் தகுந்த ஆளெனத் தேர்ந்தெடுத்தது லார்ட் லுயிமௌன்ட் பேட்டனை. மௌன்ட்பேட்டன் அழைக்கப்பட்டார். அவரிடம் சர்ச்சில் விஷயத்தை எடுத்துக்கூறி, "உன்னால் முடியுமா?" என்று கேட்டார்.

அதற்கு மௌன்ட்பேட்டன் அளித்த பதில் இதுதான்: "பிரதம மந்திரி அவர்களே! எனக்குச் சிறு வயதிலிருந்தே ஒரு பலவீனம் உண்டு. அது என்னவெனில் எந்தக் காரியத்தையும் என்னால் ஆற்ற இயலும் என்று நம்புவதுதான்."

இதைக் கேட்டு அளவற்ற மகிழ்ச்சி அடைந்த சர்ச்சில் தாம் தேர்ந்தெடுத்த ஆள் சரியான ஆள் என எண்ணி அவரையே வாஷிங்டனுக்கு அனுப்பி வைத்தார். "எதனையும் ஆற்ற இயலும் என்று நம்பும் "பலவீனம்" பெற்றிருந்த மௌன்ட்பேட்டன் சர்ச்சில் எதிர்பார்த்தபடியே வெற்றிகரமாகக் காரியம் முடித்துத் திரும்பினார்.

இவ்விதம் "இயலும் முடியும்" என்று நம்புவதானது

அலாவுதீனின் அற்புத விளக்கைப்போன்று நமக்குப் பயன்படத் தக்கதாகும். ஒரு சிறிது மாத்தும் குறையாத இவ்வித நம்பிக்கையை மட்டும் பெற்றுவிட்டால் விரும்பியதையெல்லாம் அடையத்தக்க அற்புத விளக்கைப் பெற்றவர்தாம் நாம் என்பதில் ஐயமில்லை. ஆனால் சதிகார மனம் எளிதில் அவ்விதம் நம்பாது. அவ்விதம் நம்பினாலும் இடைக்கிடையே நழுவி விழுந்துவிடும். இதனால்தான் நம்மால் அரியன செய்ய முடியாது போய்விடுகிறது.

ஆனால் முயற்சியில் வெல்லவேண்டும். எடுத்த காரியத்தில் வெற்றி பெறவேண்டும், என்று நாம் விரும்பினால் “இயலும்” என எண்ணித் துணிந்தால்தான் உண்டு. இல்லையேல் தோல்வியும் துயரமும்தான் நம் முயற்சி அனைத்தையும் தொடர்ந்து நிற்கும்.

ஒரு முயற்சியைத் தொடங்குமுன் அதன் சாதக பாதகங்களை நாமும் ஆராய்ந்து, அவசியமானால் பிறரிடம் ஆலோசனை கேட்டு அதன்பின் நாம் ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டும். அவ்விதம் தீர்மானத்திற்கு வருவதற்காக நாம் கழிக்கும் காலம் வீணாகக் கழிக்கப்பட்டதல்ல. ஒரு முறைக்குப் பதிலாக நாம் ஒன்பது முறை சிந்தித்துப் பார்க்கலாம். அவ்விதம் சிந்தித்துப் பார்த்தபின் மனக் குழப்பத்திலேயே காலம் கடத்தாது நாம் ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டும். தீர்மானத்திற்கு வந்துவிட்டோமாயின் இடையில் என்னதான் நேர்ந்தாலும் தளர்ந்து விடக்கூடாது.

ஜான் ஹண்டர் சொல்லுகிறார், "என் விதி இதுதான் நான் ஒரு வேலையைத் தொடங்குமுன் அதைப் பற்றி நன்கு ஆராய்வேன். அது காரிய சாத்தியமானதுதானா என்று கவனமாய்ப் பார்ப்பேன்; காரிய சாத்தியமற்றது என்று தோன்றினால் அதனை அப்படியே விட்டு விடுவேன். காரிய சாத்தியமுள்ளதாயிருக்குமாயின், நான் போதிய அளவு முயன்றால் அதனை ஆற்றலாம் என்று நம்புவேனாயின் அதனை தொடங்கி விடுவேன். செய்து முடிக்கும்வரை அதனை நான்

விடமாட்டேன். என் வெற்றிக்கெல்லாம் காரணம் எனக்கு நான் வகுத்து கொண்ட இந்த விதிதான்."

எமர்ஸன் கூறுகிறார், "நல்ல தீர்மானம் கொண்டிருக்கிறானே அவனே சரியாக அமைந்த மனிதன்."

பூப்ளியஸ் சைரஸ் கூறுகிறார். "எத்தனை முறை வேண்டுமானாலும் யோசித்துப் பார்த்துக்கொள்; ஆனால் தீர்மானித்து விட்டாயானால் அது இறுதி முறையாக இருக்கட்டும்."

ஜான் பாஸ்டர் சொல்கிறார் "தீர்மானம் சர்வ வல்லமையுள்ளது."

ஷேக்ஸ்பியர் கூறுகிறார் : "தேவையில் நமக்கிருக்கும் ஒரே உதவி தீர்மானம் தான்."

ட்ரயான் எட்வர்ட்ஸ் சொல்கிறார் : "நல்ல பெரிய குறிக்கோள் கொண்டு அதனை அடைவது என்று தீர்மானம் பூண்டவன், அவ்விதம் தீர்மானம் பூண்டதன் மூலம் அதன் முக்கியத் தடையை வென்று விட்டான். அந்தத் தீர்மானம் அவனுக்கு துன்பங்களை விலக்க பாதைகளைக் காட்ட நெஞ்சழிவில் துணிவளிக்க பலவீன நிலையில் பலமளிக்க காண்பான். அறிவாளிகளைப் பூரணத்தின் அருகில் அழைத்துச் செல்லும் நட்சத்திரம்போல் அது இருக்கக் காண்பான்."

கதை சொல்லுகிறார் : "மனத்தில் உறுதியான தீர்மானத்துடன் இருப்பவன் தனக்கேற்ற முறையில் உலகையே அமைத்துக் கொள்கிறான்."

தீர்மானம் பாதி வெற்றியாகும். தம்மிடம் தான் ஒரு வழக்கறிஞனாக ஆகத் தீர்மானித்து விட்டதாய்க் கூறிய இளைஞனிடம் ஆப்ரஹாம் லிங்கன் என்ன கூறினார்? "அவன் தீர்மானித்து விட்டபோது பாதி வழக்கறிஞனாக ஆகி விட்டான்" என்று தீர்மானம், செயல் வெற்றியை அவ்வளவு நிச்சயமாக்குகிறது. ஏனென்றால் அங்ஙனம் உறுதியாகத் தீர்மானித்து விட்டால் அதனை அடையாது அமைந்திருக்க

மாட்டானல்லவா? இடர், இன்னல், எதிர்ப்பு, தடை இவை அவனுக்கு ஏற்படத்தான் செய்யும். ஆனால் அவனுடைய உறுதியான தீர்மானத்தின் முன் அவற்றின் வேகம் குறைந்துவிடும்.

சர்க்கஸ்காரர்கள் காட்டு விலங்குகளை விலைக்கு வாங்கித் தான் பழகுவார்கள். அப்பொழுது அவர்கள் அவ்விலங்குகளின் மூர்க்கத்தை தணிப்பதற்கு பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கழியைப் பயன்படுத்துவதுண்டு. அதனைக் கொண்டு மாறி மாறி சூடுபோடப்பட்ட விலங்கின் மூர்க்கம் அடங்கி அது மனிதனுக்கு அஞ்சத் தொடங்கிவிடும். அதன்பின் சர்க்கஸ் நடக்கும்போது பழுக்கக்காய்ச்சிய இரும்புக்கழி என்றே அவை கருதிக் கொள்வதற்காக சிவப்பு வண்ணம் பூசப்பட்ட கழியைப் பயன் படுத்துவார்கள், விலங்குகள் வேகமாகப் பாயும். அந்தக் கழியை காட்டியதும் அடங்கிப் போய்விடும்.

அதைப்போல் தான் வென்றே தீர்வது என்று தீர்மானித்து விட்டவன் முன் மூர்க்கத் துன்பங்கள், எதிர்ப்புக்கள் யாவும் அடங்கிப் போய்விடும். முனையில் சிவப்பு வண்ணம் பூசப்பட்ட கழிபோன்று அவன் உள்ளத்தில் இருக்க வேண்டியது உறுதிதான்.

அவ்வித உறுதியே ஐரோப்பா கண்டத்திலேயே அதிக உயரமான மலை என்றும், கடக்க முடியாத கடும் தடை என்றும் கருதப்பட்ட ஆல்பஸ் மலையை ஹானிபாலுக்குப் பதினைந்து நாட்களில் பணிந்து கொடுக்கச் செய்தது; ஜூலியஸ் ஸீஸருக்கு பதினைந்து நாட்களில் பணிந்து கொடுக்கச் செய்தது; நெப்போலியனுக்கு ஐந்து நாட்களில் பணிந்து கொடுக்கச் செய்தது. ஆல்ப்ஸை வென்றே ஆக வேண்டும் என்று அவர்கள் கொண்ட தீர்மானம்தான் இரும்புச் சுவர் போல் எழுந்து நின்ற ஆல்ப்ஸை பணிந்து கொடுக்க செய்தது. ஆல்ப்ஸை வெல்வது என்ன, இந்த அகிலத்தையே வெல்லலாம் உறுதி இருந்தால், உள்ளத்தில் தீர்மானமிருந்தால்.

அதனால்தான் ட்ரயான் எட்வர்ஸ் கூறினார் : "நம்மிடம் உறுதியும், தீர்மானமும் இருக்குமாயின் மிகவும் மேலான, புனிதமான குறிக்கோளைக் கொள்ள வேண்டும். அதன்பின் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் அந்தக் குறியை அடைவதற்கான வழிகள் திறந்து கொண்டிருப்பதை காண்போம். "தடைகளும், எதிர்ப்புக்களுமே நமக்கு உதவியாய் அமைந்துவிடும்" என்று. அதனால்தான் பன்ஷன் சொன்னார், "வாழ்வில் ஒரு நோக்கங்கொண்டு அசௌகரியங்களிடையிலும் அந்த நோக்கத்தில் உறுதியாயிருப்பதே வாழ்வில் வெற்றி பெறுவதற்கான அவசிய நிபந்தனையாகும்" என்று.

எனவே ஒரு வேலையைத் தேர்ந்தெடுத்து அதனை அடைந்தே தீர்வது என்று உறுதி பூண்டபின் அதனை அடைவதற்கு நம் ஆற்றலையெல்லாம் குவித்துப் பயன்படுத்த வேண்டும். இரும்பை உருக்குவதற்கு ஒரு குறிப்பிட்ட அளவு வெப்பம் தேவை. அதுபோல் ஒரு குறியை அடைவதற்கு ஒரு குறிப்பிட்ட அளவு முயற்சி தேவை. குறிப்பிட்ட அளவிற்குக் குறைந்த வெப்பம் இரும்பை உருக்காதது போன்று குறிப்பிட்ட அளவிற்குக் குறைந்த முயற்சி வெற்றியை ஈட்டாது.

காதல் பாதை கரடு முரடானதுபோல, வெற்றிப் பாதையும் கரடுமுரடானதுதான். அது நிச்சயம் ரோஜா மலர் பரப்பப்பட்ட மென் பாட்டை அல்ல. அதில் இடர் இன்னல் இருக்கவே செய்யும். அது கண்டு மனம் தளர்ந்தாலோ, மனம் மாறினாலோ இலக்கை ஒருபோதும் அடையமுடியாது, உண்மையில் இன்னலையும், தடையையும், எதிர்ப்பையும் நமக்கு நன்மை செய்பவையாக நாம் கொள்ள வேண்டும். ஏனெனில், நாம் பெறும் வெற்றின் மதிப்பை உயர்த்துபவை அவைதாம். ஒரு ரூபாய்க்கு வாங்கிய பொருளைக் காட்டிலும் ஓராயிரம் ரூபாய்க்கு வாங்கிய பொருளைத்தான் நாம் அதிகம் போற்றுவோம். அதுபோல் எளிதாய்ப் பெற்ற வெற்றியை விட கடினமாய் உழைத்துப் பெற்ற வெற்றியே மிகவும் இனிதாயிருக்கும். அதனால்தான் மாதிவ்ஸ் சொன்னார். "உதவிகளை விடத் தடைகள் தாம்.

சௌகரியங்களை விடத் துன்பங்கள் தாம் மனிதர்களை உண்டு பண்ணுகின்றன" என்று.

அந்தக் காலத்தில் திருமணம் புரிந்துகொள்வது அவ்வுளவு எளிதானதல்ல. "புலிப்பால் கொண்டு வா!" என்று தம்மை மணக்க வந்த காளையரிடம் கேட்ட வனிதையரும் உண்டு. அரிய செயல் ஒன்றைச் செய்யச் சொல்லி அவ்விதம் செய்தவருக்கே மாலையிட்டனர் அந்தக்காலத்து மங்கையர். இவ்வித சோதனைகள் எல்லாம் ஏற்படுத்துவதற்குக் காரணம் என்ன? ஆண் மகன் தீரனாயிருக்கிறானா என்று சோதிப்பது ஒன்று என்றால் அவன், தான் பெறும் பரிசை மேலானதாய் மதிக்க வேண்டும் என்பது இரண்டாவதாகும். அதுபோன்றே நாமும் நாம் பெற்ற வெற்றி மங்கையை மதிக்க வேண்டுமானால் கடினமான சோதனைகளைக் கடந்தாக வேண்டியது அவசியம்.

இன்னல்களே இல்லாவிட்டால் வாழ்வில் சுவையே இருக்காது. எடுத்த காரியம், தொடுத்த முயற்சி எதிலும் வெற்றியைத் தவிர்த்துத் தோல்வியே கிடையாது என்பது உலக இயல்பாயிருக்குமாயின் உலகு இன்றிருக்கும் இனிமையுடன் இருக்கவே முடியாது. நிழலுக்கு இனிமை சேர்க்கும் வெயிலைப் போன்று வாழ்விற்கு இனிமை கூட்டுவது துன்பங்களாகும். வேட்கை ஏற்பட்டு நீர் அருந்தும் போது அது அதிகச் சுவையாயும், அப்படி வேட்கை ஏற்படாதிருக்கும்போது அருந்தும் நீர் அவ்வளவு சுவையில்லாதும் இருக்கிறது.

ஒருவன் காட்டு வழியே கடும் நீர் வேட்கையுடன் சென்று கொண்டிருந்தான்! எங்கும் நீர் கிடைக்கவில்லை. அது கோடை காலம் குளம் குட்டைகளெல்லாம் வரண்டு போயிருந்தன. அவனும் பகல் முழுதும் சுற்றிப் பார்த்தான். ஒரு சொட்டு நீர் கிடைக்க வேண்டுமே. நீர் வேட்கையாலும், களைப்பாலும் அவன் மயங்கி விழக்கூடிய நிலையில் சற்று தொலைவில் ஒரு பள்ளத்தில் சிறிது நீர் கிடப்பதுபோல் தெரிந்தது. ஆவலுடன் அங்குச் சென்றான். உண்மையில் அங்கு கிடந்தது நீர்தான். வேட்கை தணிய அள்ளி மாந்தினான்.

அவன் தான் இதுவரை இவ்வளவு சுவையான நீரை அருந்தியதில்லை என எண்ணினான். அது எப்படிச் சுவைத்தது அவனுக்கு. அது ஓர் அற்புத நீராக இருக்க வேண்டுமென் றெண்ணி அந்நாட்டு அரசனிடம் சென்று தெரிவித்தான். அரசன் அந்த நீரை அள்ளி வரச்சொல்லி அருந்திப் பார்த்தான். அது சாதாரண நீர் போலத்தான் சுவைத்தது. அவன் வழிப்போக்கர்களிடம் விவரமெல்லாம் விசாரித்துப் பார்த்தபின் தான் தெரிந்தான், அந்த நீரை அவன் அவ்வளவு புகழ்ந்ததற்குக் காரணம். அவன் அளவற்ற நீர் வேட்கையுடனிருந்ததால் அவனுக்கு அது அவ்வளவு சுவைத்திருக்கிறது என்னும் உண்மை புலனாயிற்று அரசனுக்கு. அந்த வழிப்போக்கனுக்குப் போல் வெற்றி அளவற்ற சுவையுடனிருக்க வேண்டுமாயின் அது துன்பப்பட்டுப் பெற்றதாயிருக்க வேண்டும்.

இவ்விதம் நாம் கூறும்போது வெற்றிக்கு இனிமை சேர்க்க வேண்டுமாயின் அதிகத் துன்பங்களை வரவழைத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணிக் கொள்ளக் கூடாது. துன்பம் வந்தால் அதுபற்றி அச்சப்படக் கூடாது. மனதைத் தளரவிடக் கூடாது என்பதுதான் நாம் கூற விரும்புவது. அவற்றைத் துன்பங்களாகக் கருதாது வெற்றி காண துணையாகக் கருத வேண்டும் என்பதே நாம் வலியுறுத்த விரும்புவது. துன்பம் வந்தால் துவளக் கூடாது என்பதுதான் நம் நோக்கமேயொழிய துன்பத்தை வரவழைத்துக் கொள்ள வேண்டும் என்பதல்ல. அது அறிவீனமாகும்.

மரத்திலிருந்த கனியை ஏறிப் பறிக்க வேண்டும் அல்லது கல்லெறிந்து பெறவேண்டும். அது தானாகவே விழுந்து விடுமாயின் வேண்டாம் என்று கூறிவிடுவதா அல்லது எவராவது பறித்துத் தந்தால் அதனைக் குறைவாகக் கொள்வதா? மைசூர்க் காட்டில் ஒரு வேட்டைக்காரன் இருந்தான். அவனுக்குச் சொந்தமான சில ஆடுகளையும், மாடுகளையும் ஒரு புலி கொன்று தின்றுவிட்டு ஓடிவிட்டது. அவன் அதனைத் தேடித் திரிந்தான். எப்படியும் அதனைப் பழிவாங்க வேண்டும் என்னும் வெறி அவனுக்கிருந்தது. ஒருநாள் இருவரும் சந்தித்துக் கொண்டார்கள். அவன் தன் ஈட்டியால் புலியைக் கொல்லப்

பாய்ந்தான். அதுவும் அவன்மீது பாய்ந்தது. இருவருக்கும் கடும் போர். ஒரு மணி நேரத்திற்கு மேலும் ஆகிவிட்டது.

நேரம் ஆக ஆகப் புலியின் வெறி ஏறிக் கொண்டிருந்தது. அவன் அது களைத்துவிடும். விரைவில் கொன்றுவிடலாம் என்று எண்ணினான். ஆனால் கணத்திற்கு கணம் அவன் களைப்பு அதிகரித்துக் கொண்டே இருந்தது. புலி அவன்மீது பாய்ந்தது. அவன் அதன் முன்னங்கால்களைப் பிடித்து அப்படியே தள்ளி கொண்டு நின்றான். புலியின் வாய் அவன் தலையை நோக்கித் திறந்தவாறு இருந்தது. எந்தக் கணத்திலும் அது அவன் தலையைக் குதறிவிடலாம்.

அவன் தன் ஆற்றலையெல்லாம் திரட்டித்தான் பிடித்துக் கொண்டிருந்தான். எவ்வளவு நேரத்திற்குத்தான் மூர்க்கப் புலியுடன் ஒரு மனிதன் தனியாகச் சமாளிக்க முடியும். அவன் கைகள் தளர்ந்து கொண்டிருந்தன. புலியின் வாய் அவன் தலையை நோக்கி நெருங்கி கொண்டிருந்தது. இதனை வேட்டையாட வந்த ஒருவர் பார்த்து விட்டார். உடனே அவர் தம் துப்பாக்கியை எடுத்து மிகவும் எச்சரிக்கையுடன் புலியை நோக்கிச் சுட்டார். புலி புரண்டு விழுந்தது. அந்த மனிதன் தன் உயிரைக் காப்பாற்றியவரைத் திரும்பிப் பார்த்தான்.

காரியத்தை கெடுத்து விட்டீர்களே! இந்தப் புலியுடன் எனக்கு நீண்ட நாள் பகையாயிற்றே. இன்று என் பழியைத் தீர்த்துக் கொள்வது அல்லது அதற்குப் பலியாவது என்றல்லவா தீர்மானித்திருந்தேன் என்றான் அவன் அவரைப் பார்த்து.

இது அவனுடைய ஆண்மையைக் காட்டினாலும் அறிவை காட்டவில்லை. இவனைப் போல் நாம் துன்பத்தை வரவழைத்துக் கொள்ள வேண்டியதில்லை. ஆனால், அது வந்தால் விடக்கூடாது. ஷேக்ஸ்பியர் கூறினார், "சண்டைக்குப் போகாதே! சண்டை என்று வந்துவிட்டால், உன்னை எப்போதும் நினைத்திருப்பதுபோல் நடந்து கொள்!" என்று. அவர் கூறியது போன்று நாம் துன்பங்களை வரவழைக்கவும் வேண்டாம் வந்துவிட்டால் துன்பம் மீண்டும் நம்மிடம் வர யோசிக்கிறாற்போல் நாம் நடந்து கொள்ள வேண்டும்.

# 2. முயற்சியின் துணை

வாழ்வில் வெற்றி பெறுவதற்கு உண்மையில் துன்பங்கள் தடைகளே அல்ல. அவை வெற்றிக்குத் துணையானவை. வெற்றி பெற்றே தீர்வது என்னும் உறுதி பூண்டவர்கள் ஒருபோதும் துன்பங்களைக் கண்டு மனம் தளரமாட்டார்கள். துன்பங்கள் அவர்களைத் துவளச் செய்வதற்கு மாறாகத் துடிப்புடன், வேகத்துடன், ஆர்வத்துடன் வேலை செய்யச் செய்யும். அதனால்தான் துன்பங்கள் நமக்குத் துணை செய்கின்றன என்கிறோம். துன்பங்கள் நம் திறமைக்கு, நம் வலிமைக்கு விடப்படும் அறைகூவலாகும். ஆண்மையுள்ள நாம் அந்த அறைகூவலை ஏற்றுத் தானாக வேண்டும். இடருக்கு இடர் சூழ்ந்து வெற்றி பெற்றே மீளுவது என்று உறுதி கொள்ள வேண்டும். அவ்விதம் உறுதியுடன் செயலாற்றுவோமாயின் வெற்றி நமக்குத்தான் என்பதில் ஐயமும் இல்லை.

துன்பங்கள் வந்து விட்டு வெறுமனே செல்வதில்லை. அவை நமக்கு நல்ல பாடங்களைப் பயிற்றுவித்து விட்டுத்தான் செல்கின்றன. அதனால்தான் அறிஞர்கள் துன்பங்களைச் சிறந்த ஆசிரியர் என்கின்றனர். எத்தனையோ பேர் பள்ளியில் பயில மறுத்தவர்கள், வாழ்க்கையில் துன்பங்கள் என்னும் ஆசிரியரிடம் பயின்று நன்கு உயர்ந்திருக்கின்றனர். எவரிடமும் பயில விரும்பாத சில அடங்காப் பிள்ளைகளைக் கூட அது அடக்கி அறிவும் பயிற்றுவித்திருக்கிறது. ஆசிரியர் கண்டிக்க முடியாத அளவு துன்பம் கண்டிக்க இயன்றதுதான் அதன் சாதனைக்குக் காரணமாகும்: ஆசிரியர் தயங்கலாம். துன்பம் தயங்காது. அதனால்தான் அடங்காப் பிள்ளைகளுக்குத் துன்பம் நல்ல ஆசிரியராகப் பயன்படுகிறது.

எனவே, முயற்சியாற்றுபவர்கள், துன்பத்தைக் கொண்டு எத்தனையோ விஷயங்களைக் கற்றறிந்து அவ்விதம் அறிந்தவற்றைப் பயன்படுத்தி வாழ்க்கையில் வெற்றி பெறலாம். அறிவு பெற, ஆர்வம் பெற, அது சிறந்த சாதனமாயிருப்பதால்

தான் ஷார்ப் சொன்னார், "வெற்றி கொள்ளப்படும் துன்பங்கள் நமக்குப் பாடம் பயிற்றுவது மட்டுமல்ல, எதிர் காலத்தில் நாம் ஈடுபடும் போர்களில் நமக்கு ஊக்கம் அளித்து, உற்சாகமும் அளிக்கின்றன" என்று.

அறிவும், ஆர்வமும் அளிப்பதுடன் நில்லாது துன்பங்கள் நமக்கு வலிமையையும் வழங்குகின்றன. மற்போர் வீரர்கள் மண் மூட்டையைக் கட்டித் தொங்கவிட்டு அதில் குத்தி, குத்தித் தம் உடலுக்கு உரம் சேர்ப்பார்கள். அவ்விதம் செய்யும்போதுதான் அவர்களின் தசைநார்கள் உரம் பெறுகின்றன. கடினமாக உழைக்கும் உழவர்களும் மீன் பிடிக்கும் தொழிலாளர்களும் உடல் உரம் பெற்றிருக்கக் காரணம் என்ன? அவர்கள் இயற்கையின் துன்பங்களை ஒவ்வொரு நாளும் அனுபவிக்கிறார்கள். காற்றுக்கும் மழைக்கும் அவர்கள் கடுகளவும் அஞ்சுவதில்லை. வெய்யில், பனியை அவர்கள் பொருட்படுத்துவதே கிடையாது. இவ்விதம் அவர்கள் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு வேலை செய்வதுதான் அவர்களின் உடலில் உரம் சேரக் காரணமாகும்.

இவ்விதம் துன்பங்களையெல்லாம் அனுபவித் தறியாத செல்வர்களிடம் உடல் உரம் இருக்க முடியாது. சுக நாற்காலியில் படுத்துக் கிடந்து இன்பக் கேளிக்கைகளில் இலயித்திருந்தவன் மற்போர் வெளிக்கு வந்து கை கொடுத்துவிட முடியுமா? துன்பங்களுக்குத் தன் உடலை இலக்காக்கிக் கடுமையான பயிற்சிகள் மூலம் அதனை இரும்பாக்கிக் கொண்டவன் தான் மற்போர் வெளிக்கு வரமுடியும். அதனால்தான் பாக் சொன்னார், "நம்முடன் மற்போர் புரிபவன் நம் நரம்புகளை பலப்படுத்துகிறான். நம் திறனை கூர்மையாக்குகிறான்" என்று.

'அதனால்தான் செனேகா கூறினார், துன்பங்கள் நம் மனத்தைப் பலப்படுத்துகின்றன. உடல் உழைப்பு உடலைப் பலப்படுத்துவது போன்று" என்று.

அதனால்தான் ஹேஸ்லிட் சொன்னார், "நம் வலிமை நாம் ஈடு கொடுக்கும் எதிர்ப்பின் அளவு விகிதத்தில் இருக்கும்" என்று.

அதனால்தான் பன்ஷன் கூறினார், "உங்கள் பாதையில் துன்பங்களிருந்தால் அதற்காக நீங்கள் அவற்றிற்கு நன்றி செலுத்த வேண்டும். அவை தாம் உங்களின் ஈடு கொடுக்கும் வலிமையை, தாங்கும் சக்தியைச் சோதிக்கின்றன" என்று.

அதனால் தான் மாத்யூஸ் சொன்னார். "துன்பம்தான் ஆண், பெண் இருபாலாரின் திறன் மலரும் களம்" என்று.

துன்பங்களே ஒருவனிடம் மறைந்திருக்கும் வலிமையையும், திறமையையும் வெளிப் படுத்துகின்றன என்பது உண்மையாகும். சாதாரண வலிமையும், திறமையும் வாய்க்கப் பெற்றவர்கள் என்று கருதப் பட்டவர்கள் கூட இடரின் நடுவில், துன்பத்தின் இடையில் அசாதாரண வலிமையும், திறமையையும் காட்டியுள்ளனர்.

துன்பம் ஏற்படும்போது வலிமையை, திறமையைக் காட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது. பைதாகரஸ் கூறவில்லையா, "தேவையும் திறனும் அடுத்தடுத்து உறைகின்றன!" என்று. வீடு தீப்பிடித்து விட்டாலோ, வெள்ளம் போன்ற அபாயம் ஏற்பட்டாலோ சிலருக்கு அசாதாரண வலிமையும் திறமையும் வந்து விடுவதுண்டல்லவா? சிறு கல்லைப் புரட்ட முடியாதவர் கூட பெரும் பாரமுள்ள பொருள்களைத் தூக்கிவிட கண்டிருக்கிறோம். இதற்குக் காரணம் என்ன? பைதாகரஸ் கூறியது போன்று தேவைதான்.

காட்டு நடுவில் ஒருவன் சென்று கொண்டிருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது வயப் புலி ஒன்று வாயைத் திறந்து கொண்டு பாய்கிறது. வலுவற்றவனா யிருந்தாலும் அவன் தப்பி ஓட இயலா அந்நிலையில் புலி வலிமையுள்ளதென்றோ, தான் வலுவற்றவன் என்றோ கருதாது போராடுவானல்லவா? அப்பொழுது அவன் இதுவரை தன்னிடம் இவ்வளவு வலிமை இருந்திருக்கிறதா என்று கருதுமளவு தன்னிடம் வலிமை இருக்கக் காண்பானல்லவா! அந்த

வலிமையைக் கொண்டு அவன் வயப் புலி என்றும் பாராது போராடுவானல்லவா? இந்த அசாதாரண திறமையை விழுங்கியது எது? எதிர்பட்ட துன்பமும் அந்தத் துன்பத்தை வெல்ல வலிமையைப் பயன்படுத்த வேண்டிய அவசியமுமல்லவா?

நீரில் மூழ்கி இறப்பவர்கள் இலேசில் மூழ்கி விடுவார்களா? தம்மிடமுள்ள வலிமையனைத்தையும் பயன்படுத்திப் பார்ப்பதும் முடியாது போகும்போது தான் மூழ்குவார்கள். எத்தனையோ பேர் எங்கிருந்தோ வந்த அசாதாரண வலிமை கொண்டு நீந்தி உயிர் தப்பவில்லையா? இந்த வலிமை எப்படி வந்தது? துன்பமும் தேவையும் அதனை வழங்கியது என்பதில் என்ன ஐயம்?

துன்பங்களுடன் போராடப் போராடத்தான் மனிதனுக்கு வலிமை வளர்கிறது. இடரும் இன்னலும் தாம் அவன் திறனைச் சோதித்துக் கூராக்குகின்றன. தீட்டத் தீட்டத்தான் கத்திகூடக் கூராகிறது. ஒரு பொருளை நம்மால் தூக்க முடியாவிட்டால் நாம் என்ன செய்கிறோம்? மூச்சைப் பிடித்து வலிமையைப் பெருக்குகிறோம் அல்லவா? ஒரு பொருள் நமக்கு எட்டவில்லையாயின் என்ன செய்கிறோம்? ஆற்றலைச் சேர்த்து எகிறிப் பாய்கிறோமல்லவா? மூச்சைப் பிடிப்பதும், எகிறிப் பாய்வதும் தேவைக்குக் குறைவாயிருந்த நம் வலிமையை வளர்த்துக் கொள்வதற்குத்தான்.

துன்பங்கள் நம்மிடம் இருப்பதைக் காட்டிலும் அதிக வலிமையைக் கேட்கின்றன. அதனால் நம் வலிமையை வளர்க்க வழி செய்கிறோம். இவ்விதம் திரும்பத் திரும்பச் செய்யும்போது தற்காலிகமாய் வளர்ந்திருந்த வலிமை நிரந்தரமானதாகி விடுகிறது. முன்பு மூச்சுப் பிடித்துத்தான் தூக்க இயன்ற பொருளை இப்பொழுது நாம் அநர்யாசமாகத் தூக்கும் வலிமையை நிரந்தரமாகப் பெற்றுவிடுகிறோம். அதனால் தான் சாப்பின் சொன்னார், "பலவீனன்கூடத் துன்பத்துடன் போராடப் போராட பலவானாய் ஆகிவிடுவான்" என்று.

போர் வீரர்கள் செய்யும் "கவாத்து" என்றால் என்ன?

அவர்கள் தம் நன்மைக்காக, அதாவது தம் வலிமையை வளர்த்துக் கொள்வதற்காகத் தமக்கே தாம் செய்து கொள்ளும் துன்பங்கள் தாமே. உடற்பயிற்சி அனைத்துமே துன்பங்கள் தாமே. ஆனால் இவை நன்மை செய்பவையாகும். துன்பங்கள் நமக்கு நன்மை செய்பவைதாமே. கடும் துன்பங்களுக்கு இலக்கான இனங்கள் வீர இனங்களாக இலங்கக் காரணம் இதுதான். காடுகளில் வாழும் பழங்குடி மக்கள் பயில்வான்களாய் விளங்குவதற்கும் காரணம் இதுதான். ஆதி மனிதன் அசாதாரண வலிமையுடன் இருந்ததற்குக் காரணமும் இதுதான்.

மனிதர்கள் இன்று பலவீனர்களாய் ஆகிவிட்டதற்குக் காரணம் என்ன? அவர்களுக்கு வசதிகள் வளர்ந்து விட்டதுதான். ஆதி மனிதன் மிகவும் துன்பப்பட்டு பெற்ற பொருள்களையெல்லாம் இன்று நாம் மிக எளிதில் அடைந்து விடுகின்றோம். தேன் வேண்டுமாயின் ஆதி மனிதன் அதற்காக எவ்வளவோ துன்பப்பட்டிருக்க வேண்டும். காட்டில் எங்கு அடை பிடித்திருக்கிறது என்று அவன் அலைந்து கண்டறிய வேண்டும். கண்டறிந்தபின் அதனைப் பிறரோ விலங்குகளோ எடுத்துவிடாது காக்க வேண்டும். தேன் சேர்ந்தபின் தேனீக்களின் கொட்டுகளைத் தாங்கித் தேனடையை எடுக்க வேண்டும்.

தேன் அடையும் மரத்தின் உச்சிக் கொம்பிலோ, மலையின் அபாயகரமான இடுக்கிலோ இருக்கலாம். இவ்வளவு ஆபத்துக்களையும் இவ்வளவு துன்பங்களையும் தாங்கினால்தான் அவனுக்குத் தேன் கிடைக்கும். ஆனால் இன்று நமக்கு அழகான புட்டிகளில் காஷ்மீர் தேனும், மைசூர் தேனும் காசு கொடுத்த அடுத்த கணம் கைக்குக் கிடைத்து விடுகிறது. அதற்காக நாம் எடுத்துக் கொள்ளும் பிரயாசை மிகவும் குறைவு. இதுவே நாம் இன்று நம் மூதாதையர்களைப் போலன்றிப் பலவீனர்களாய் இருக்கக் காரணமாகும்.

முன்பு மனிதனுக்கு விலங்குகளுக்கு இருப்பதை போலவே கூரான பற்கள் இருந்ததாயும் நாளாக, நாளாக மனிதன்

வசதிகளைப் பெருக்கிக் கொண்டு விட்டதனால் அவனுக்கு வலிமை பயனில்லாமல் போய்விட்டதென்றும் அதனால்தான் நீண்டு கூராயிருந்த அவன் பற்களும் குறுகிவிட்டன என்று கூறுவாரும் உண்டு.

அமெரிக்கா இன்று வசதிகள் பெருத்த நாடாகி விட்டதால் அங்குக் குறைந்த உழைப்பால் நிறையக் கிடைக்கும் வாய்ப்புகள் வந்துவிட்டன. அதனால் அமெரிக்க இளைஞர்கள் நாளுக்கு நாள் பலவீனர்களாய் ஆகி வருகிறார்கள். வசதிகள் பெருகிவிட்டதால் இனிமேல் அமெரிக்கர்கள் எழுந்து நடமாட வேண்டிய அவசியம்கூட இல்லை என்னும் நிலை அங்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. பித்தான்களை அழுத்தியதுமே வேண்டும் பொருளெல்லாம் வந்து விடுகிறது. போதுமான உடற்பயிற்சி இல்லாமல், அமெரிக்கர்களில் பெரும்பாலார் நோயாளிகளாக ஆகிவிடும் அபாயம் அண்மிக் கொண்டிருக்கிறது. இவற்றின் மூலமெல்லாம் வசதிகளும், சுகங்களுமே வலிமைக்கு வடிகால் வெட்டுபவை என்பதை அறியலாம்,

இடரும் இன்னலுமே வலிமை சேர்ப்பவையாகும். பழங்காலத்தில் கிரீஸிலிருந்து சிறு அரசுகள் ஒன்றுக் கொன்று அடிக்கடி போராடிக் கொண்டிருந்ததால் தான் அவற்றின் குடிமக்கள் வலிமை நிறைந்த வீரர்களாய் இலங்கலாயினர். அமெரிக்க இளைஞர்களைவிட ஆங்கில நாட்டு இளைஞர்கள் அதிகம் வலுவுள்ளவர்களாக இருப்பதற்குக் காரணம் ஆங்கிலேயர்கள் சென்ற நூற்றாண்டுகளில் உலகை வெல்ல; ஆள, பட்ட துன்பங்கள் தாம்.

துன்பங்களுக்கு அடுத்தபடியாக முயற்சி யாற்றுபவரின் முனை ஒடிக்க வருபவை எதிர்ப்புகள். பெரும்பாலும் நல்ல செயல்கள் எல்லாமே எதிர்ப்பிற் கிடையில் இயற்றப்பட்டவை தாம். உலகில் அரியவை செய்து புதுமைகள் புரிந்தோர் அனைவரும் கடும் எதிர்ப்பைக் கண்டவர்கள்தாம். கலீலியோவின் கொள்கைக்கு எதிர்ப்பு ஏற்படாமல் இருக்கவில்லை.

எனவேதான் எதிர்ப்பு, முயற்சிக்கு ஒரு தடை அல்ல. உண்மையில் துன்பங்களை போலவே அது ஒரு துணைதான். முயற்சியாற்றிக் கொண்டு முன்னேறு பவனுக்குத் துன்பங்கள் என்னவென்ன நன்மைகளெல்லாம் செய்யவல்லதோ அத்தனையும் செய்யவல்லது தான் எதிர்ப்பும். இந்த விஷயத்தில் இடருக்கு ஒன்றும் குறைந்ததல்ல எதிர்ப்பு. வெற்றி பெறாது ஓய்வதில்லை என்று முயற்சியாற்றுபவருக்கு துன்பங்களால் எவ்விதத் தீமையும் செய்ய இயலாதது போலவே எதிர்ப்பாலும் செய்ய இயலாது. முயற்சியின் முனை ஒடிப்பதற்குப் பதிலாக முனை கூராக்கு பவையாகும் இவை இரண்டும்.

உலகில் எதிர்ப்பில்லாமல் எதுவும் ஏற்பட்டதில்லை. எதிர்ப்பிற்கு இலக்காகும் முதலாமவர் நாம் அல்ல, நமக்கு முன் பிறந்து மறைந்த எண்ணில் அடங்காதவர், அரியன செய்ததெல்லாம் எதிர்ப்பிற் கிடையில்தான். எதிர்ப்பு முனையில் தான் அவர்கள் தாம் எடுத்த காரியத்தைச் சாதித்து உலகின் இதயத்தில் இடம் பெற்றார்கள்.

பொருள்கள் ஒன்றை ஒன்று மேதிக்கொள்ளும் போதும் தான் அதாவது எதிர்த்துக் கொள்ளும்போது தான் கூராகின்றன. அதேவிதம் மனிதனின் வலிமையும் திறனும் எதிர்ப்பு ஏற்பட்டால் தான் வளரும், கூராகும். சாணையில் கொடுக்கப்படாத கத்தி மழுங்கி விடுவதைப்போல இன்னலுக்கும், எதிர்ப்பிற்கும் இலக்காகாத மனிதனும் ஆகிவிடுவான் என்பது உறுதி. உலகில் இடர், எதிர்ப்பிற்கு ஈடு கொடுத்த ஓர் ஏழையின் வலிமைக்கும் திறனிற்கும் அனுபவத்திற்கும் அருகில்கூட வரஇயலுமா ஒரு செல்வந்தரின் வலிமையும், திறனும், அனுபவமும். கொல்லன் நாள்தோறும் சம்மட்டி பிடித்து வேலை செய்யும்போது அவன் கைகள் கடும் எதிர்ப்பிற்கு இலக்காகிக் காய்த்துப் போய்விடுகின்றன. அதன்பின் கத்திகூட அவன் கைகளில் இறங்க மறுக்கிறது. ஆனால் ஒரு வேலையும் செய்யாத செல்வரின் கையை ஓர் ஓலைக் கீற்றுக்கூடப் பதம்பார்த்து விடுகிறது.

 

இன்னல், எதிர்ப்புகள் ஆகியவற்றிற்கு அடுத்தபடியாக முயற்சியாற்றுபவரின் முனை ஒடிக்க முயலுபவை தடைகள் தாம். தடைகளை, நாம் தடைகளாகவே கருதாது நாம் உயரே ஏறிச் செல்வதற்கான படிகளாகக் கருதவேண்டும். அதனால்தான் மாத்யூஸ் சொன்னார். "மனிதர்களை உண்டு பண்ணுபவை உதவிகள் அல்ல, தடைகள் தாம்" என்று. மாமனிதர்கள் எல்லாருமே தடைப்படிகளில் ஏறி முன்னேறியவர்கள்தாம். அறிவியல் உண்மைகளைக் கண்டுபிடித்தவர்கள் எடுத்ததும் தம் ஆய்வில் வெற்றி பெற்றுவிடவில்லை. அவர்களின் முயற்சியில் எத்தனையோ தடைகள் குறுக்கிடத்தான் செய்தன. அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் அவர்கள் வேலை செய்ததால் தான் முயற்சியில் வெற்றி பெற முடிந்தது.

அவர்களுக்கு ஆய்வு நடத்துவதற்கான இடம் கிடையாது, கருவி கிடையாது. பசி தணிக்க உணவு கிடையாது. வேறு வசதிகள் எதுவும் கிடையாது. இத்தனை அசௌகரியங்களாகிற தடைகளின் நடுவில்தாம் அவர்கள் தம் ஆய்வைத் தொடர்ந்து செய்தார்கள். அரிய உண்மைகளையும் கண்டுபிடித்தார்கள்; அற்புதங்களையும் செய்து காட்டினார்கள். எலிவளை போன்ற இடங்களே அவர்களின் ஆய்வுக் கூடங்களாக இருந்தன. கத்தியும், சுத்தியலுமே அவர்களின் கருவிகளாக இருந்தன. இவற்றைக் கொண்டு இரவு, பகல் என்று பாராமல் அவர்கள் ஆய்வு நடத்தும்போது வயிற்றுப் பசியும் வறுமையும் அவர்களை வாட்டி வதைத்துக் கொண்டிருந்தது. "மூலதனம்" என்னும் நூலை எழுதிக் கொண்டிருக்கும் போது கார்ல்மார்க்ஸ் வறுமைக்குத் தம் அருமைக் குழந்தைகள் இருவரைப் பலி கொடுத்தார்.

வசதியான சூழ்நிலைகளில் ஆற்றப்பட்டதைவிட அதிகமாக, வசதியற்ற சூழ்நிலைகளில்தாம் ஆற்றப் பட்டுள்ளன. உலகிற்கு மாளிகைகள் புரிந்த நன்மைகளை விட மண் குடிசைகள்தாம் அதிக நன்மைகள் புரிந்திருக்கின்றன. ஒரு ஹோமரோ, தாந்தேயோ மாளிகையில் பிறக்கவில்லை. ஒரு ஜேம்ஸ்வாட்டோ, ஹம்ப்ரி டேவியோ மாளிகையில்

பிறக்கவில்லை. வசதி குறைவுகள் இவர்களுக்குத் தடைகளாக அமைவதற்குப் பதிலாக உதவிகளாக அமைந்து விட்டன. இவர்களுக்கு வசதிகள் செய்யப்பட்டிருந்தால் இவ்வளவு ஆர்வத்துடன், அதிகப்படியான சாதனைகளை ஆற்றியிருப்பார்களா என்பது சந்தேகம்தான்.

அடுத்து, முயற்சியாற்றுபவரின் முனை ஒடிப்பது தோல்வியாகும். உறுதியற்றவர்கள், உரமற்றவர்கள் அனைவரும் தோல்விக்குப் பலியாகிவிடவே செய்வர். "எது வந்தாலும் வரட்டும்" என்று உறுதி பூண்டவரை மட்டுமே தோல்வியால் எதுவும் செய்ய இயலாது. தோல்வியை வெல்வதற்கான ஒரே வழி, அது கண்டு அஞ்சாது, நெஞ்சழியாது நிமிர்ந்து நிற்பதுதான். மனம் தளர்ந்துவிட்ட மறுகணம் தோல்வி, கீழே தள்ளி புதைக்கக் குழி தோண்டிவிடும்.

மனித முயற்சிகள் அனைத்தும் வெற்றியுடையவையா யிருப்பதில்லை. வெற்றியும், தோல்வியும் மாறிமாறி வந்து கொண்டுதானிருக்கும். மனித முயற்சிக்கு, இரவும் பகலும் மாறி, மாறி வருவதைப்போல. எனவே, முயற்சியில் தோல்வி ஏற்படுவது புதியதல்ல, ஆச்சரியப்படத் தக்கதல்ல, ஆயாசப்படத் தக்கதுமல்ல. அது ஆர்வம் பெருக்கத் தக்கதாகும். பெரு வெற்றி பெற்றவர்கள் அனைவரும் தோல்விகளைப் பலமுறை சுவைத்தவர்கள்தாம். அறிவுக்குரிசில் ஆல்பர்ட் ஈன்ஸ்டீனும், வின்ஸ்டன் சர்ச்சிலும் தேர்வுகளில் தோற்றவர்களே. ஆர்க்ரைட்டும், ஆல்வா எடிஸனும் ஆய்வுகளில் தோல்வியைக் கண்டவர்கள்தாம். ஆனால் அந்தத் தோல்விகள் அவர்களை உள்ளழிக்கவில்லை. நெஞ்சொடிக்கவில்லை. அதற்கு மாறாக அவர்களின் ஆர்வத்தைப் பெருக்கின. ஆற்றலை வளர்த்தன.

மற்போர் வீரன் பலரிடம் கை கொடுத்துத் தோற்றாலும் அவன் வலிமை வடிந்து விடுவதில்லையல்லவா? அவன் வலிமை வளர்ந்திருப்பது உண்மையல்லவா? தோல்விகள் முயற்சியை முடித்து கொள்வதற்கான தடைகளா யிருந்திருக்குமாயின் அவற்றைத் தடைகளாக அவர்கள் கருதியிருப்பார்களாயின் அவர்களை பற்றி இந்த பக்கங்களில் எழுதவே ஏற்பட்டிராது.

ஆல்பர்ட் ஈன்ஸ்டீன் ஒரு சாதாரணப் பள்ளி ஆசிரியராக இருந்திருப்பார். வின்ஸ்டன் சர்ச்சில் ஏதாவது ஒரு சிறு அலுவலில் ஈடுபட்டிருப்பார்.

இவர்கள் தோல்வியை நுகர்ந்தவர்கள் என்றாலும் இவர்கள் தோல்வியே காணாதவர்கள் என்றே குறிப்பிடப் படுகிறார்கள். இதற்குக் காரணம் என்ன? இவர்கள் தோல்வியைத் தோல்வியாகக் கருதுவதில்லை. தோல்வியை வெற்றியின் ஓர் அங்கமாகத்தான் இவர்கள் கருதுவர். ஏனெனில், வெற்றிக்குத் தோல்வியும் வேண்டற்பாலதாகும். ரொட்டியின் ஒரு துண்டையும் ரொட்டி என்றுதான் குறிப்பிடுகிறோம். அதைப் போல வெற்றியின் ஒரு பகுதியாகும் தோல்வி. எனவே, அதுவும் வெற்றிதான். இவ்விதம் கருதியவர்கள்தாம் ஆல்பர்ட் ஈன்ஸ்டீனும் வின்ஸ்டன் சர்ச்சிலும், பலாப்பழம் என்று குறிப்பிட்டால் அது வெறும் சுளையை மட்டும் குறிப்பிடுவ தல்லவே. சுளை, சடை இவற்றையும் தாமே அது குறிப்பிடுகிறது. அதைப்போலத்தான் வெற்றி என்றால் அது கனி மட்டுமல்ல. வெற்றி மட்டுமல்ல, அது சடையும் சேர்ந்ததுதான். தோல்வியும் கொண்டது தான்.

ஒருவர் பல்கலைக் கழகப் பட்டம் பெற்றிருந்தால் அவர் தேர்வுகள் அனைத்திலும் வெற்றி பெற்றவராகவோ, குறிப்பிட்ட அந்தப் பட்டத் தேர்வில் பலமுறை தோற்றவராகவோ இருக்கலாம் அல்லவா? ஆனால் நாம் அவர் அடைந்த இறுதி வெற்றியைத்தான் கவனிக்கிறோம். அதனைக் கொண்டே அவரை மதிக்கின்றோம். ஆனால் அவர் பெற்றிருக்கும் வெற்றிக்குள் பல தோல்விகள் மறைந்திருப்பது உண்மைதான். ஆனால் அந்தத் தோல்விகளும் இணைந்ததுதான் அவருடைய வெற்றியாகும்.

எனவே, தோல்வி ஏற்பட்டுவிடுமோ என்று அஞ்சி முயற்சியாற்றாமலே இருப்பதானது முழு மூடத்தனம் மட்டுமல்ல; பெரும் கோழைத்தனமுமாகும். எழுந்தால் விழுந்து விடுவோமோ என்று எண்ணி அதனால் அஞ்சி, இருந்த இடத்தைவிட்டு எழாத குழந்தைகள் வேண்டுமானால் கீழே

விழாதிருக்கலாம். ஆனால் அதன் கால்கள் உரம் பெறாது, துவண்டு முடமாகப் போவது உறுதி அல்லவா? எனவே, விழுந்தால் பாதகமில்லை என்று எண்ணி எழும் குழந்தை விழத்தான் செய்யும். ஆனால் அது விரைவில் நடக்கக் கற்றுக் கொள்வது உறுதி. கால் இறங்காமல் நீந்தக் கற்றுக் கொள்ள எவராலும் இயலாது; எழாது, நடக்கக் கற்றுக் கொள்ளவும் எவராலும் முடியாது.

நீந்த வேண்டுமாயின் நீரில் இறங்கித்தானாக வேண்டும். அதேபோல் வாழ்வில் வாகை பெறவேண்டுமாயின் முயற்சியாற்றுவது ஒன்றுதான் வழியாகும். எழும்போது விழத்தான் வேண்டிவரும். விழுவதாலும் பாதகமில்லை. நீந்தக் கற்றுக் கொள்ளும்போது நீரைக் குடிக்கத்தான் வேண்டிவரும். குடித்தாலும் பாதகமில்லை. விழுந்து, விழுந்து எழும்போதுதான் நடக்கவும் நீரில் மூழ்கி நீரைக் குடிக்கும்போதுதான் நீந்தவும் நாம் தெரிந்து கொள்ள முடியும்.

எந்தத் தோல்வியிலும் ஏதாவது ஓர் இலாபம் இல்லாமல் இல்லை. தோல்விகள் நம் பலவீனத்தை எடுத்துக் காட்டுகின்றன. நம் தவறுகளைத் தாட்சண்யமின்றி புலப்படுத்துகின்றன. தேர்வில் ஏற்படும் தோல்வி நாம் எந்தப் பாடத்தில் பலவீனமா யிருக்கிறோம். அவ்விதம் பலவீனமாயிருக்கக் காரணம் என்ன, அந்த பலவீனங்களை நிவர்த்திக்க வழி யாது என்பவற்றை யெல்லாம் நமக்கு எடுத்துக் காட்டுகிறது. நாம் புரிந்த தவறுகள் எது, சரியானது எது என்பதை நமக்கு எடுத்து விளக்குகின்றன. அதனால் நாம் தோல்விக்கு முன்பு இருந்ததைவிட தோல்விக்குப் பின் அதிக அறிவும் அதிக அடைவும் பெற்றவர்களாய் ஆகிவிடுகிறோம். அதன்பின் மீண்டும் பழைய பலவீனங்களை அனுமதியாமலும், மீண்டும் பழைய தவறுகளைப் புரியாமலும் நாம் அதிக எச்சரிக்கையுடன் செயலாற்றத் தொடங்குகிறோம்.

அதனால் தோல்வி ஏற்படாதிருந்தால் வெற்றிக்கக் கூடிய வெற்றியை விடச் சிறப்பான வெற்றியைப் பெற்றுவிட ஏது ஏற்பட்டு விடுகிறது. சாலையில் சென்று கொண்டிருக்கிறோம்.

அதில் குண்டும் குழியுமாயிருப்பதை நாம் கவனிக்கவில்லை. நாம் ஒரு பள்ளத்தில் விழுந்து விட்டோம். இது ஒரு தோல்விதானே. இந்தத் தோல்விக்குப்பின் நாம் என்ன செய்வோம்? அந்தச் சாலை நாம் நினைத்ததைப்போல் நல்ல சாலை அல்ல, அதில் குண்டும் குழியும் உண்டு என்னும் உண்மை நமக்குத் தெரிய வந்துவிடும். எனவே, அதில் முன்போல் கவனமில்லாமல் நடப்பது தவறு. அதில் எச்சரிக்கையுடன் நடப்பது அவசியம் என்று எண்ணுவோம். அதன்படி எச்சரிக்கையுடன் நடப்போம். இப்பொழுது முன்போல் குண்டு குழிகளில் விழும் வாய்ப்பில்லை. இத்தனை நன்மைகளையும் செய்தது நாம் ஒருமுறை பள்ளத்தில் விழுந்ததுதான்.

ஆல்பர்ட் ஈன்ஸ்டீன் சொல்லுகிறார், "நான் பண்ணும் ஆராய்ச்சிகளில் செய்யும் முடிவுகள் தொண்ணூற்று ஒன்பது முறை தவறாகவே இருக்கும். நூறாவது தடவை தான் சரியாக இருக்கும்" நூறாவது முறை அவர் செய்த முடிவுதான் சரியானது, மற்ற முடிவுகள் அனைத்தும் தவறானவை என்பதைத் தெரிந்து கொள்வதற்காவது அவர் தொண்ணூற்று ஒன்பது முறை தவறியது பயன்பட்டதல்லவா? மேலும் அந்த விஷயம் பற்றித் தவறான முடிவுக்கு வர தொண்ணூற்று ஒன்பது வாய்ப்புக்கள் வரை இருக்கின்றன என்னும் உண்மையு மல்லவா அது விளக்கிவிட்டு விடுகிறது.

ஒருவரை நாம் பார்க்கச் செல்கிறோம். அப்பொழுது அவர் அங்கு இல்லை. அது நம்முடைய அந்த முயற்சியில் தோல்விதான் என்றாலும் அவர் அங்கு இல்லை என்பதைத் தெரிந்து கொள்ளவாவது அந்த தோல்வி பயன் பட்டதல்லவா! நாம் வீட்டில் உட்கார்ந்து கொண்டிருந்தால் அதனை எப்படி தெரிந்து கொள்ள முடியும்? அதனால்தான் "தோல்வியை ஒரு கல்வி" என்றும் அதனை "முன்னிருந்ததினும் சிறந்த ஒன்றை நோக்கி எடுத்து வைக்கப்படும் அடியாகும்" என்றும் கூறுகிறார் பிலிப்பின். அதனால் தான் "தோல்வியில் படிப்பினைகள் மலிந்து கிடக்கின்றன" என்கிறார் தொல் அறிஞர் ஒருவர்.

விழுந்து, விழுந்து எழுவதால் குழந்தை நடக்க மட்டும் கற்றுக் கொள்ளவில்லை. அதன் மூலம் அதன் எலும்புகளும், தசை நார்களும் வலுவுறுகின்றன. அதைப் போல, தோல்வி ஏற்படுவதால் மனிதனின் வலிமை மட்டும் வளர்வதில்லை. அதன்மூலம் அவன் அறிவும் அடைவும் அதிகமாகின்றன.

எனவே, நாம் முயற்சியாற்றும்போது எதிர்ப்படும் துன்பங்களையும் எதிர்ப்புகளையும் தடைகளையும் தோல்விகளையும் கண்டு சிறிதளவும் மனம் தளர்ந்து விடக்கூடாது. மனம் மட்டும் தளராமல் நாம் இருப்போமாயின் இவற்றால் நம்மை எதுவும் செய்துவிட முடியாது. நாய் விரட்டுமானால் நாம் ஓடக்கூடாது; ஓடினால் அது விடாது விரட்டவே செய்யும். ஓடாமல் நிற்போமாயின் ஓடி வந்த நாயின் வேகம் குறைந்துவிடும். இரண்டு முறை குரைத்து விட்டுத் திரும்பிப் போய்விடும். அதைப்போல நாம் இவற்றைக் கண்டு அஞ்சினோமாயின், அகம் அழிந்தோமாயின் இவை நிச்சயம் நம்மை வீழ்த்தி வெற்றி கொண்டுவிடும்; மயங்காமல் மலைபோல் நிற்போமாயின் இவை பின்வாங்கிவிடும்.

"ஆந்திர கேசரி" என்று ஆந்திர மக்களால் பெருமையுடன் அழைக்கப்பட்ட பிரகாசம் அவர்கள் மிகவும் நெஞ்சழுத்தம் உள்ளவர். அவர் ஒருமுறை மறியல் செய்யும்போது துப்பாக்கி ஏந்திய போலீஸ்காரர்கள் விரட்டத் தொடங்கினார்கள். தம் சட்டையை திறந்து கொண்டு பிரகாசம் "சுடுங்கள் என்னை!" என்று நெஞ்சுயர்த்திக் கூறினார். போலீஸ்காரர்கள் சுடவுமில்லை. அதன்பின் அவரை விரட்டிச் செல்லவுமில்லை. பிரகாசம் மட்டும் அவ்வாறு செய்யாதிருப்பாராயின் போலீஸ்க்காரர்கள் அவரை விடாது வீடுவரை விரட்டிச் சென்றிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. அவரைப்போல் விரட்ட வரும் துன்பத்திற்கும், எதிர்ப்பிற்கும், தடைக்கும், தோல்விக்கும் நாம் நிமிர்ந்து நின்று நெஞ்சைக் காட்டவேண்டும். அப்பொழுதுதான் அவை அடங்கும். அவற்றைக் கெஞ்சத் தொடங்கினோமோ அவை மிஞ்சத் தொடங்கிவிடும். நாம் மிஞ்சத் தொடங்கினோமானால் அவை கெஞ்சத் தொடங்கிவிடும்.

# 3. விடா முயற்சி

முயற்சியில் வெற்றிபெற வேண்டுமாயின் துன்பங்களையும், எதிர்ப்புகளையும், தடைகளையும், தோல்விகளையும் நாம் வெற்றி கொண்டாக வேண்டும். அவற்றை வெற்றி கொள்வதற்கான ஆயுதங்களாக நாம் கீழ் வருவனவற்றைக் கூறலாம்.

1. பொறுமை
2. மன அமைதி
3. நிலை குலையாமை
4. சுறுசுறுப்பு
5. கவனம்

நாம் முயற்சியாற்றி வரும்போது துன்பங்களோ, எதிர்ப்புகளோ, தடைகளோ, தோல்விகளோ ஏற்பட்டால் நாம் ஆத்திரம் அடைந்து விடுகின்றோம் அல்லது மனம் தளர்ந்து போகின்றோம். இதற்குக் காரணம், நம்மிடம் போதிய அளவு பொறுமை இல்லாதிருப்பதுதான். எந்தச் செயல்தான் தடங்கல்கள் இல்லாமல் நடந்திருக்கின்றது? இவை நமக்குத்தான் முதன் முதலாக ஏற்படுபவையும் அல்ல. அத்துடன் தடங்கல்கள் அசௌகரியங்கள் தாம் என்றாலும் அவையும் நமக்கு ஒரு விதத்தில் உதவி செய்பவைதாம். இவ்வித எண்ணங்கள் மட்டும் நம் மனத்தில் அவ்விதச் சங்கட நிலைகளில் ஏற்படுமானால் நாம் ஆத்திரமடையவுமாட்டோம்; மனம் தளரவுமாட்டோம்.

வாழ்வில் இன்பமும் துன்பமும் ஏற்படுவது இயல்பு. பிறப்பு, இறப்பு ஏற்படுவதைத் தடுக்க முடியாததுபோல வாழ்வில் இன்பமும் துன்பமும் ஏற்படுவதையும் எவராலும் தடுக்க இயலாது. அது இயற்கை இயல்பு. அது என்றும் மாறா விதி. அதைப்போல நாம் எடுக்கும் முயற்சிகளில் தடங்கல்கள் ஏற்படுவது இயல்பு. அதனை எவராலும் தடுக்க முடியாது.

அங்ஙனமிருக்கும்போது நாம் எப்படி ஆத்திரமடைய முடியும்? கோடை காலத்தில் நம் நாட்டில் வெயில் கடுமையாக் இருக்கிறது. அந்தக் காலத்தில் வெயில் கடுமையாக இருக்கத்தான் செய்யும். அது இயற்கையின் சட்டம். அதைக் கண்டு ஆத்திரப்படுவது அறிவுடைமை ஆகுமா? இயற்கையின் சட்டத்தை நாம் மீற முடியாது. முயற்சியில் சங்கடங்கள் குறுக்கிடுவதை நாம் தடுக்க முடியாது; அவற்றை நாம் பொறுத்துக் கொண்டு தொடர்ந்து முயற்சியாற்றும் போது வெற்றி நம்மை வரவேற்று நிற்கத் தவறாது.

சிலர் முயற்சியில் தடங்கல்கள் ஏற்பட்டதும் "நாம் முயற்சியாற்றும்போது தடங்கல்கள் ஏற்படுவதா?" என்று எண்ணி ஆத்திரம் அடைந்து விடுகின்றனர். முயற்சியாற்றுபவருக்கு இத்தகைய ஆத்திரம் அறவே கூடாது, அவர்கள் எந்த நிலையிலும் பொறுமை இழக்கக்கூடாது.

இன்னும் சிலர் தடங்கல்கள் ஏற்பட்டதும் மனம் துவண்டு போய்விடுகிறார்கள். இதனால் அவர்களால் தொடர்ந்து வேலை செய்ய இயலாமற் போய்விடுகிறது. வேகமாக வேலை செய்துவரும் இவர்களுக்கு ஏதாவது ஒரு தடங்கல் ஏற்பட்டு விட்டால் போதும், அத்துடன் உள்ளழிந்து நெஞ்சொடிந்து அப்படியே அந்த வேலையை விட்டு விடுவார்கள். எவர் எவ்வளவுதான் ஊக்குவித்தாலும் இவர்கள் மனம் மாறுவதில்லை. இது மிகவும் பலவீன நிலையாகும்.

ஓடிக்கொண்டிருந்த வண்டி ஒரு கல்லில் மோதி நின்றுவிட்டால் வண்டியை அங்கேயே கைவிட்டு விட்டுச் சென்று விடுவதா? இது நிச்சயம் அறிவுடைமை ஆகாது. இத்தகு நிலையில்தான் பொறுமை மிக மிக அவசியமானதாகும். நாம் மட்டும் பொறுமையோடு தொடர்ந்து முயற்சிக்கும்போது வெற்றி விரைவில் வந்துவிடுவது உறுதி. அரையும் குறையுமாய் முயற்சியை விட்டுவிடுவதால் வலிமை விரயமாவதுடன் வெற்றியும் விலகிப் போய்விடுகிறது.

ஒருவன் ஒரு கடை வைத்து நடத்தி வந்தான்.

வாடிக்கைக்காரர்களும் சிறுகச் சிறுகச் சேர்ந்து கொண்டிருந்தார்கள். ஒருநாள் கணக்குப் பார்த்தான். இழப்பு ஏற்பட்டிருக்கிறாற்போல் தோன்றியது. அவன் ஆத்திரமடைந்து விட்டான். இவ்வளவு பாடுபட்டும் பலனில்லையே என்று, உள் அழிந்து போனான். நம் உழைப்பு நல்ல பயன் அளிக்கவில்லையே என்று. அதன்பின் அந்தக்கடையை மூடியே விட்டான். மற்றொருவன் அடுத்த நாளே அந்தக் கடையைப் பிடித்து நடத்தத் தொடங்கினான். முன்னவன் வளர்த்து வைத்திருந்த வாடிக்கைக்காரர் தொகையை நன்கு பயன்படுத்திக் கொண்டான். வெற்றி அவனுக்குக் கிடைத்துவிட்டது. அடுத்த மாதமே அவன் கையில் ஆதாயத்தைப் பார்த்தான்.

அறிவியல் துறையில் ஆய்வு நிகழ்த்தும்போது உண்மைகள் பளிச்சென்று தோன்றிவிடுவதும் உண்டு. பல ஆண்டுகள் தொடர்ந்து ஆய்ந்தும் பலன் கிட்டாமல் இருப்பதும் உண்டு. பாடுபட்டும் பலன் கிட்டவில்லையே என்ற ஆத்திரத்தில், பொறுமை இழந்து இதுவரை கண்டறிந்து குறித்து வைத்திருந்த குறிப்பையெல்லாம் கிழித்துப் போட்டுவிடுவது அறிவுடைமையே ஆகாது அது வலிமையை வீணடிப்பதாகும். யார் கண்டது? தொடர்ந்து மட்டும் நாம் ஆய்வு நிகழ்த்திவரின் அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் நமக்கு அறிவியல் உண்மை ஒன்று பளிச்சிட்டுவிடலாம்.

தொண்ணூற்று ஒன்பது முறை தோற்றபோதும் ஆல்பர்ட் ஈன்ஸ்டீன் பொறுமை இழக்கவில்லை. அதனால்தான் அவர் எடுத்த முயற்சியில் வெற்றி பெற்று அறிவுலகின் பெருமதிப்பிற்கு ஆளாக முடிந்தது. ஆல்வா எடிசன் சொல்லுகிறார், "எதனையும் நான் "திடும்" எனக் கண்டுபிடிக்க வில்லை" என்று. அதன் பொருள் என்ன? அவர் பலமுறை தோற்று, மீண்டும் மீண்டும் முயன்ற பின்னர்தான் அறிவியல் உண்மைகளைக் கண்டார் என்பதுதானே.

நாம் பொறுமை இழந்து ஆத்திரத்தின் வாய்ப்பட்ட

அடுத்தகணம் அறிவு நம்மிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு விடுகிறது. உணர்ச்சி, பேச ஆரம்பிக்கும்போது அறிவு மௌனமாகிவிடும். இதனால் நம்மால் அறிவோடு சிந்திக்க இயலாமல் போய்விடுகிறது. பொறுமையை இழந்துவிட்டு, அறிவை அப்புறப்படுத்திவிட்டு ஆடுகிறவன் அறிவிற்கும் வேலை கொடுக்கமாட்டான். அறிவும் அவனுக்கு ஆலோசனை கூறத்தயங்கும். ஏனெனில், அது அறியும், தன் ஆலோசனையை அவன் ஏற்கமாட்டான் என்பதை. இந்நிலையில் அறிவால் இயங்காமல், உணர்ச்சியால் இயக்கப்பட்டு ஆடி அவன் பிரச்சினையைக் குழப்பிக் கொண்டு விடுவான்.

ஒன்றின் நன்மை, தீமைகளை நாம் சரிவர அறியவேண்டுமாயின் அதனை நாம் பொறுமையோடு ஆராயவேண்டியது அவசியம். ஆத்திரமடைந்த நிலையிலோ, மனம் தளர்ந்த நிலையிலோ நமக்கு நன்மை புலப்படாது, தீமை மட்டுமே தெளிவாகத் தெரியும். இதனால் தவறான முடிவுக்கு வந்து நாம் தோல்வியை அணைத்துக்கொள்ள நேரும். பொறுமைதான் ஆத்திரத்தை அகற்றி, அறிவிற்குத் தெளிவளிக்கும். அந்தத் தெளிவோடு ஆராயும்போது தான் நாம் பாரபட்சமற்ற முடிவுக்கு வரமுடியும்.

தோல்வி வேளையில், துன்ப வேளையில் பொறுமையோடு இருப்பது கஷ்டமாகத்தான் இருக்கும். கஷ்டமாக இருக்கிறது என்பதற்காக எதனையும் நாம் விட்டுவிட முடியுமா? கஷ்டமாக இருக்கிறது என்பதற்காக முயற்சி அனைத்தும் கைவிடப்பட்டிருக்குமாயின் உலகு இவ்வளவு முன்னேறியிருக்க முடியுமா? கஷ்டப்பட மட்டும் மனிதன் தயங்கியிருப்பானாயின் அவன் கடுகள்வாவது முன்னேறியிருப்பானா என்பதும் ஐயம்தான். கஷ்டத்தைக் கஷ்டமாகக் கருதாது உழைத்ததால்தான் இன்று நாம் இவ்வளவு வசதிகளுடன் வாழ்கிறோம். அதனால்தான் பிரஞ்சுப் புரட்சியின் ஆன்மா போன்று விளங்கிய ரூஸ்ஸோ சொன்னார், "பொறுமை என்னவோ கசப்பானதுதான். ஆனால் அதன் கனி

மிகவும் இனிப்பானது" என்று.

"பொறுத்தார் பூமி ஆள்வார்" என்பது நம் நாட்டு முதுமொழிகளுள் ஒன்று. பொறுமையோடிருப் பவர்க்கு உலகாளும் வாய்ப்பும் வந்து சேரலாம் என்பதே அதன் பொருளாகும். நிச்சயமாக பொறுமையைக் கொண்டு நிறைபயன் அடையலாம். பொறுமையோடு உழைத்தவர்கள்தாம் அரியன புரிந்த அனைவரும் ஆவர். அதனால்தான் அறிஞர் ஒருவரும் கேட்டார், "பொறுமையைப் பெற்றிருக்கும் ஒருவன் அடைய முடியாதது எது இருக்கிறது?" என்று.

துன்பங்களையும் துயரங்களையும் சகித்துக் கொண்டு பொறுமையோடு உழைத்தவர்கள்தாம் கோப்பர்னிகஸும், ஆடம்ஸ்மித்தும், டார்வினும், கார்ல்மார்க்ஸும் ஆவர். கோப்பர்னிகஸ் தம் ஆய்வு ஒன்றை முப்பதாண்டுகள் தொடர்ந்து செய்தார். ஆடம்ஸ்மித் "வெல்த் ஆப் நேஷன்" என்னும் நூலை பதினேழாண்டுகள் எழுதினார். டார்வின் "ஆரிஜின் ஆப் ஸ்பீஸீஸ்" என்னும் நூலைப் பதினேழாண்டுகளில் எழுதி முடித்தார். கார்ல் மார்க்ஸுக்கு "டாஸ் கேபிடல்" (மூலதனம்) என்னும் நூலை எழுதி முடிப்பதற்குப் பதினேழாண்டுகள் தேவைப்பட்டன. இந்த ஆண்டுகளில் அவர்கள் எவ்வளவு துன்பங்களுக்கு ஆளாகியிருப்பர். எவ்வளவு இடர்களுக்கு இலக்காகி யிருப்பர். எனினும், அவர்கள் பொறுமை இழக்கவில்லை. காரணம், அவர்கள் அறிவர், பொறுமையோடு செய்யப் பட்ட உழைப்பு வீண் போகாது என்னும் உண்மையை. எகிப்தின் பிரமிட்டுகளும், தாஜ்மஹாலும், தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயமும் பொறுமையின் சின்னங்கள் அல்லவா?

பொறுமையான உழைப்புக்குச் சிறந்த உதாரணமாய் பெர்னார்ட் பாலிஸ்ஸியின் வாழ்வைச் சொல்லலாம். 1510 -ஆம் ஆண்டில் பிரான்சிலுள்ள ஏகன் என்னுமிடத்தில் பிறந்தார் அவர். தந்தை கண்ணாடித் தொழில் செய்பவர். அதில் அதிக வருமானம் வராததால் குடும்பம் வறுமையில் வாடியது. அதனால்

பாலிஸ்ஸியால் பள்ளியின் படிக்கட்டுகளில் கூட ஏற இயலவில்லை. "நான் கற்றதெல்லாம் வானிலிருந்தும் பூமியிலிருந்தும்தான். அவைதான் என் நூல்கள்" என்றார் அவர்.

கண்ணாடித் தொழில் கைகொடாது போகவே பாலிஸ்ஸி தம் பதினெட்டாவது வயதில் தமக்கு ஏதாவது ஓர் இடம் உண்டா என்று தேடுவதற்காகப் பரந்த இந்த உலகில் பயணம் செய்யத் தொடங்கினார். பத்து ஆண்டுகள் அலைந்து திரிந்த பின் மணம் செய்து கொண்டார். அதனால் பொறுப்பு சுமை அதிகமாகியது. எனவே, "எனாமல்" களியைக் கண்டுபிடிக்க முயன்றார். விடா முயற்சியுடனும், பொறுமையுடனும் அதனைக் கண்டுபிடிக்கத் தீர்மானித்தார்.

"எனாமல்" எந்த எந்தப் பொருள்களின் கலப்பினால் உண்டாகிறது என்பதை ஊகித்தறிய முயன்றார். அதற்காக அவர் பல பொருள்களையும் வைத்துப் பண்ணிய ஆராய்ச்சிகள் கொஞ்ச நஞ்சமல்ல. தமக்குத் தெரிந்த எல்லாப் பொருள்களைக் கொண்டும் சோதனை செய்து பார்த்தார். பாத்திரங்கள் வாங்கி உடைத்து, உருக்கிப்பார்த்தார். ஆனால், அவை உருக மறுத்தன. பாத்திரங்களும், எரிபொருள்களும், மருந்துகளும், காலமும், உழைப்பும் வீணானதே கண்ட பலனாயிருந்தது. உடையும் உணவும் வாங்கப் பயன்படும் பணம் இப்படி வீணாகிக் குடும்பத்தை வறுமையின் பிடியுள் தள்ளுகிறதே என்று பாலிஸ்ஸியின் மனைவி பரிதவித்தாள்.

ஆனால் பாலிஸ்ஸி தம் ஆராய்ச்சியை விடவே இல்லை. முதலில் கட்டிய அடுப்பு பயனற்றதாகி விட்டதும் அவர் வீட்டிற்கு வெளியே இன்னொரு அடுப்புச் சூளை கட்டினார். பாத்திரங்களை உடைத்துப்போட்டு, மருந்தை ஊற்றி, நெருப்பு வைத்து எரிக்கலானார். பாத்திரம் செய்யப்பட்டிருந்த பொருள் உருகவே இல்லை. தம் சூளையில் தோல்வி கண்டதும் இன்னொரு சூளைக்குச் சென்று அங்கு சோதித்துப் பார்த்தார். அங்கும் தோல்விதான் அவருக்கு ஏற்பட்டது. ஏமாற்றமும், தோல்வியும் அவர் ஆர்வத்தை அழிக்கவில்லை. அதற்கு மாறாக அவை

அதனைக் கிளர்ந்தெழச் செய்தன.

இன்னும் இரண்டாண்டுகள் இப்படியே சோதனைகள் நடத்தி வந்தார். கையிலிருந்த பணமெல்லாம் கரைந்து போய்விட்டது. அதற்காக அவர் மனம் தளரவில்லை. மேலும் பாத்திரங்கள் வாங்கி அவற்றை உடைத்துத் தம் ஆய்வைத் தொடர்ந்தார். நான்கு மணி நேரம் தொடர்ந்து எரிந்த பின் முன்னூறு துண்டுகளில் ஒரே ஒரு துண்டு மட்டும் உருகி, ஒளி விட்டது. பாலிஸ்ஸி அதனை எடுத்து, குளிரவைத்து, தம் மனைவியிடம் கொண்டு ஓடினார். ஆனால் இது முழு வெற்றியல்ல. இந்தச் சிறு வெற்றி அவர் ஆர்வத்தைப் பெருக்கிவிட்டு விட்டது. முன்னிலும் அதிக ஆர்வத்துடன் ஆய்வு நடத்தத் தொடங்கினார். தம் வீட்டிற்குள்ளேயே இரகசியமாக ஒரு சூளை அமைக்கவும் தீர்மானித்தார்.

அதற்குப் பிறரை நியமித்தால் அவர்கள் அதனைத் தெரிந்து கொள்வார்கள் என்று எண்ணித் தாமே கல் சுமந்து வந்து கட்டினார். எட்டு மாத உழைப்பிற்குப் பின் ஒரு சூளை தயாராகியது. தேவையான எரி பொருள்களும் சேர்ந்தாகி விட்டது. பாலிஸ்ஸி சூளையில் ஆய்வுப் பொருளைப் போட்டு நெருப்பை கொளுத்தி, விடாது அன்று முழுதும் எரி பொருளை அள்ளிப் போட்டுக்கொண்டே உருகுகிறதா என்று பார்த்து நின்றார். அன்று இரவும் சூளை எரிந்தது. ஆனால் "எனாமல்" உருகவில்லை, பொழுது புலர்ந்துவிட்டது.

அன்று முழுதும் எரிந்து அடுத்த நாளும் பிறந்துவிட்டது. "எனாமல்" உருகவே காணோம். கதிர் மடிந்து, கங்குகளும் பரவிவிட்டது. இரவு முழுதும் பாலிஸ்ஸி "எனாமல்" உருகுகிறதா என்று ஆவலோடு பார்த்துக் கொண்டே இருந்தார். மூன்றாம் நாளும் வந்து போய்விட்டது. ஐந்தாம் நாளும் பிறந்து ஆறாம் நாளும் நடந்து கொண்டிருந்தது. அளவற்ற பொறுமையுடனும் அசைக்க முடியாத நம்பிக்கையுடனும் பாலிஸ்ஸி கவனித்துக் கொண்டே இருந்தார்.

தாம் உருக்கத் தேர்ந்த பொருள் சரியானதுதானா

என்னும் ஐயம் ஏற்பட்டது. புதிய பொருள்கள் பலவற்றைப் போட்டார். தொடர்ந்து சூளை எரிந்துகொண்டே இருந்தது. மூன்று வாரங்களும் ஆகிவிட்டன. எரிபொருள் குறைந்தது. கடன் வாங்கி எரிபொருள் வாங்கினார். சூளை மட்டும் அணையவே இல்லை. விரைவில் எரிபொருள்கள் அனைத்தும் தீர்ந்து போய்விட்டன. எனாமலோ சிறிதும் உருகவில்லை. ஆனால் பாலிஸ்ஸி மனம் தளரத் தயாராயில்லை.

தோட்டத்து வேலிச் சட்டங்களை உடைத்துக் கொண்டு வந்து அடுப்பில் போட்டார். "எனாமல்" உருகும் வழியாயில்லை. இன்னும் பத்து நிமிடம் தொடர்ந்து எரியுமானால் எனாமல் உருகிவிடலாம் என்று நம்பினார் பாலிஸ்ஸி. எனவே, எதனை உடைத்துப் போட்டாவது நெருப்பு அணைந்துவிடாது காக்கவேண்டும் என்னும் வெறி ஏற்பட்டு விட்டது அவருக்கு. வீட்டிற்குள் ஓடினார். மேஜை நாற்காலிகளைப் போட்டு உடைத்தார். அள்ளிக்கொண்டு ஓடிச்சென்று அடுப்பிற்குள் திணித்தார். அவர் மனைவியும், குழந்தைகளும், "அவருக்கு பைத்தியம் பிடித்துவிட்டது, மேஜை நாற்காலிகளைப் போட்டு உடைக்கிறார்" என்று தெருவிற்குக் கத்திக்கொண்டு ஓடினார்கள். இவ்வளவும் செய்தும் அடுப்பு அணைந்துவிட்டது. எனாமல் உருகவில்லை. பாலிஸ்ஸி உருக்குலைந்து போனார்; கடன் வாய்ப்பட்டு அழிவின் விளிம்பில் அலையலானார்.

எனினும் அவர் அதிக நாள் அப்படி இருக்கவில்லை. விரைவில் மற்றொரு முயற்சி தொடங்கினார். அவர் பொறுமையும், உழைப்பும், விடா முயற்சியும் இந்த முறை அவரை ஏமாற்றி விடவில்லை. "எனாமல்" உருகிவிட்டது. பாலிஸ்ஸி வெற்றி பெற்றுவிட்டார். இந்த வெற்றியைக் காண அவர் பதினாறு ஆண்டுகள் கடுமையான துன்பங்களுக்கிடையில் பொறுமையாகப் போராட வேண்டியிருந்தது. அவர் பட்ட பாட்டை அவரே கூறுகிறார்:

"என்னுடைய துன்பங்களிலெல்லாம் பெரும் துன்பம் என் வீட்டாரே என்னைப் பண்ணிய கேலியும் நையாண்டியும்தான்.

அவர்கள் எனக்குச் செய்த கொடுமைகள் கொஞ்சமா, நஞ்சமா? எத்தனையோ ஆண்டுகள் என் சூளைக்குமேல் கூரை இல்லாதிருந்தது. சூளையில் வேலை செய்யும்போது இரவு வேளைகளில் நான் கடும் குளிருக்கும் மழைக்கும் இலக்காவேன். சில சமயங்களில் கொடும் புயல்கூட என் சூளையைத் தாக்குவதுண்டு. அப்பொழுதெல்லாம் காற்றின் வேகத்தைத் தாங்க முடியாமல் வீட்டிற்குள் ஓடி விடுவேன். மழையில் தொப்பலாகிப் போய் நான் சேறும் சகதியுடன் விளக்கில்லாமல் வீட்டிற்குள் தடுமாறிக்கொண்டு கிடப்பேன். குடிகாரனைப் போன்று அப்படியும் இப்படியும் சாடிக் கொண்டிருப்பேன்."

பொறுமைக்கு அடுத்தபடியாக நமக்கு வேண்டியது மன அமைதியாகும். எந்த முயற்சியிலும் இறங்கு முன்னர் நாம் அது பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டியது அவசியம். ஆத்திரப்பட்டு, உள்ளமும் உடலும் குலுங்கிக் கொண்டிருக்கும் போதோ அல்லது மூளை கொதித்துக் கொண்டிருக்கும்போதோ நாம் ஆழ்ந்து சிந்திக்கவும் முடியாது. சரியான முடிவுக்கு வரவும் முடியாது. முயலுமுன்னர் நன்கு சிந்திப்பதே வெற்றியின் துவக்கமாகும். அவ்விதம் சிந்திப்பதற்கு மன அமைதி மிக மிக அவசியமானதாகும். தோல்வி ஏற்படும் செயலில் நாம் முனையாமல் இருக்கவும், தோல்வி ஏற்படுகிறாற்போல் செயலாற்றாமல் இருக்கவும், தோல்வி ஏற்படும்போது துவளாமல் இருக்கவும் மன அமைதி தேவையாகும்.

முயற்சி, துன்பங்கள், எதிர்ப்புகள், தடைகள், தோல்விகளில் மோதி நிற்கும்போது மன அமைதியுடன் எல்லோராலும் இருக்க இயலாது. அந்நிலையில் ஆத்திரப்படுவோரும், ஆயாசப்படுவோரும், அதிர்ந்து போவோரும், உள் அழிந்து போவோரும்தாம் அதிகம் என்று கூறவேண்டும். அவ்வித வேளைகளில் ஆத்திரப்படாமல், ஆயாசப்படாமல், அதிர்ந்து போகாமல், உள் அழிந்து போகாமல் இருப்பவர்களே ஆண்மை உள்ளவர்கள் ஆவர்.

ஏதாவது துன்பம் நேரும்போது சிலருக்குக் கையும் ஓடாது. காலும் ஓடாது. அவர்களின் உடல் அதிரத் தொடங்கிவிடும். அவர்கள் பரபரப்புடன் வேலை செய்வர். இப்படிப் பரபரப்புடன் வேலை செய்யும்போது அவர்கள் தவறுகள் நிறையச் செய்துவிடுவர். அதற்குக் காரணம் அவர்கள் சரியாகச் சிந்திக்க முடியாத அளவு தங்களைப் பலவீனப் படுத்திக் கொண்டு விடுவதுதான். குடிகாரர்களின் காலை வெகு எளிதில் தட்டிவிட்டு அவர்களை வீழ்த்திடலாம். ஒருவகையில் இவர்களும் ஒருவிதக் குடிகாரர்கள்தாம். இவர்கள் கால் தடுமாறிக் கீழே விழ ஏது ஏராளம் உண்டு. இவ்வித நிலை நமக்கு ஏற்பட நாம் அனுமதிக்கவே கூடாது.

எவ்விதத் துன்பம் ஏற்பட்ட நிலையிலும், எத்தகு அபாயம் சூழ்ந்துவிட்ட வேளையிலும் ஒன்றுமே நேராதது போன்று நாம் அமைதியுடன் செயலாற்ற வேண்டியது அவசியம். பாம்பை அடிக்கக் கம்பை எடுக்க ஓடியவன் தனக்கு ஏற்பட்ட பரபரப்பில் பாம்பையே வந்து தூக்கினானாம். ஆபத்து ஏற்படும்போது ஓரளவு சுறுசுறுப்பு அவசியம்தான். ஆனால் பரபரப்பு அறவே கூடாது. சுறுசுறுப்பு, அறிவோடு வேகமாய் வேலை செய்வது. பரபரப்பு, அறிவை அகற்றி வைத்துவிட்டு, என்ன செய்கிறோம். யாது புரிகிறோம் என்று புரியாமல் எதையாவது, பெரும்பாலும் தவறானதைச் செய்வது.

உலகப் போர் தீவிரமாக நடந்து கொண்டிருக்கிறது. நாளுக்கு ஒரு நாடாக ஹிட்லர் விழுங்கிக் கொண்டே வருகிறார். சர்ச்சில் கலங்கிப் போய் விட்டார். ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிடம் உதவி கோருவதற்காக வாஷிங்டனுக்குச் செல்கிறார். அங்கு ஜனாதிபதியும் மிகவும் கவலையோடு இருப்பார் என்றுதான் சர்ச்சில் எதிர் பார்த்தார். ஆனால் அவர் வெண்மாளிகைக்குள் நுழையும்போது உலகில் போர் ஒன்று நடந்து கொண்டிருக்கிறது; அதுவும் கழுத்துக்குக் கத்தி வைக்கும் போர் என்ற எண்ணமே இல்லாமல் பேரக்குழந்தைகளுடன் ரூஸ்வெல்ட் சிரித்துக் கும்மாள மடித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அது கண்டு

சர்ச்சிலுக்கு ஆச்சரியமாய்ப் போய்விட்டது. இவ்விதம் எவ்வித அபாய வேளையிலும் பரபரப்படையா மன நிலையைப் பெற்றிருந்ததால் தான் ரூஸ்வெல்ட்டால் அமைதியாகச் சிந்தித்து அறிவான முடிவுகள் எடுக்க முடிந்தது.

"அஞ்சுவது ஒன்றிற்கே அஞ்சுக!" என்னும் கொள்கையைக் கொண்டிருந்த ரூஸ்வெல்ட் இவ்வித அசாதாரணத் துணிச்சல் கொண்டிருந்ததால்தான் அவரைச் சிங்கத்தின் வீரமும் நரியின் தந்திரமும் அமைந்தவர் என்று குறிப்பிடுகிறார் ஒருவர். துணிச்சல் தான் அமைதிக்கு மூலமாகும். கோழைகள் தாம் சிறு விஷயத்திற்கெல்லாம் அஞ்சி, பரபரப்படைந்து விடுகின்றனர். அதனால்தான் அவர்கள் தவறுக்கு மேல் தவறு புரிய ஏது ஏற்பட்டு விடுகிறது.

அடுத்து நமக்கு வேண்டியது நிலைகுலையா மன நிலையாகும். அபாயம் நேரும்போது அல்லது துன்பம் விளையும்போது அமைதி குலைந்து பரபரப்படைந்து ஏறுமாறாய் ஏதாவது செய்து விடுவர் சிலர். இன்னும் சிலருக்கு இந்நிலைகளில் எதுவுமே செய்ய இயலாது போய்விடும். "திடும்" என வாதத்தால் தாக்கப்பட்டவர் போல் ஆகிவிடுவர் இவர்கள். இந்நிலையே நிலைகுலைதல் எனப்படும். வீட்டில் தீப்பிடித்துவிட்டால் எழுந்து ஓடத் தோன்றாது இவர்களுக்கு. வெள்ளம் வந்து விட்டால் வீட்டைவிட்டு வெளியேற வேண்டும் என்னும் எண்ணமே ஏற்படாது இவர்களுக்கு. இது மிகவும் பலவீன நிலையாகும்.

அமைதியாகச் சிந்தித்துத் தேர்ந்த ஒன்றை உள உறுதியுடன், எதிர்ப்படும் எதனையும் ஏற்றுக் கொள்வது என்னும் மனநிலையுடன், அவ்விதம் ஏற்படும்போது பொறுமையுடன் செயலாற்ற உதவும் நிலையே நிலைகுலையாமையாகும். அரும் செயல்கள், அடைதற்கரிய சாதனைகள் ஆற்றிய பலவான்களின் மிகச் சிறந்த தன்மைதான் நிலைகுலையாமையாகும்.

வெற்றியை எதிர்பார்த்து வேலை செய்யும் நாம் துன்பம்

யாதும் குறுக்கிட்டு விட்டால் அப்படியே நிலைகுலைந்துபோய் விடுவதா? ஆர்வத்துடன் வேலை செய்து கொண்டிருந்த நாம் ஏதாவது இடர் குறுக்கிட்டதும் அப்படியே உட்கார்ந்து விடுவது அறிவுடைமையாகாது. ஆண்மையுமாகாது. அவ்வித நிலையில்தான் நாம் அதிக ஆர்வத்துடன் வேலை செய்ய வேண்டும். அப்பொழுது தான் நமக்கு வெற்றியும் கிட்டும்.

நிலைகுலையாமைக்கு அடுத்தப்படியாக நமக்கு வேண்டியது சுறுசுறுப்பு. இந்த நிலை தவறான உற்சாகமுமல்ல. வேலை செய்யவேண்டும் என்னும் அளவுக்கதிகமான விருப்பத்தின் நிறைவுமல்ல. இவை இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையாகும் அது. இதனை மந்தத்திற்கு எதிர் நிலை என்று வேண்டுமானால் கொள்ளலாம். பொறுமையாக வேலை செய்ய வேண்டும், மன அமைதியை இழந்துவிடக்கூடாது. நிலைகுலைந்து விடுவதும் உகந்ததல்ல என்று எண்ணிக்கொண்டு மிகவும் மந்தமாக வேலை செய்யக் கூடாது. எந்த வேலையை செய்தாலும் அதனைச் சுறுசுறுப்புடன் செய்யவேண்டும்; பரபரப்படையவும் கூடாது, அவசரப்படுவதும் அவ்வளவு நல்லதல்ல. சுறுசுறுப்பென்பது ஒரு குறியை நோக்கி, தேக்கமில்லாமல், மந்தமில்லாமல், அதே சமயத்தில் அமைதியோடு முன்னேறும் ஓர் உன்னத நிலையாகும். அதுவே வேண்டற்பாலதாகும். முயற்சியில் வெல்ல வேண்டும் என்னும் விருப்பம் உள்ளவர்களுக்கு.

அடுத்து நமக்கு வேண்டியது கவனம். ஒரு குறியை அப்படி இப்படி அசையாமல் ஒரே நோக்கத்துடன் செல்லுவதே கவனம் எனப்படும். அறிவு ஆற்றல் அனைத்தையும் ஒரு குறியில் குவிப்பதே ஆகும் அது. முழுக் கவனத்துடன் செய்யப்படாத எந்த முயற்சியும் வெற்றி பெற முடியாது. அப்படி வெற்றி பெற்றாலும் அது அவ்வளவு சிறப்பாயிராது. அறிவியல் அறிஞர்களும், இலக்கிய ஆசிரியர்களும் தம்மையே மறந்து வேலையில் ஈடுபட்டிருப்பர். டிக்கன்ஸ் நவீனங்கள் எழுதும்போது ஊண், உறக்கத்தையே மறந்திருப்பாராம். இதற்குக் காரணம் என்ன?

அவர்கள் தாம் தேர்ந்த வேலையில் தம் முழு கவனத்தையும் செலுத்தியது தான், தன்னை மறந்து, ஊண் உறக்கத்தை மறந்து வேலை செய்யும்போதுதான் அரிய இலக்கியம் பிறக்கிறது. அரிய கண்டுபிடிப்புக் கிடைக்கிறது.

ஒரு வேலையை. நாம் முழுக் கவனத்துடன் செய்யும்போது தான் அதன் குறை, நிறைகளைக் கண்டுக் கொள்ள முடியும். அப்பொழுதுதான் நாம் குறைய்ய நீக்கவும் நிறையைப் பெருக்கவும் முடியும். அரைகுறை கவனத்துடன் செய்யும்போது நாம் வேலையின் உண்மைத் தன்மையை உணர்ந்து கொள்ள இயலாது. அரைகுறை கவனத்துடன் ஆய்வு நிகழ்த்திய எவரும் உண்மைகளைக் கண்டுபிடித்ததாக நாம் அறியவில்லை.

ஒரு சமயத்தில் ஒரு வேலை செய்வதே அந்த வேலையை சிறப்பாக செய்வதற்கு வழியாகும். ஒரு சமயத்தில் ஒன்பது வேலைகளைச் செய்பவர், ஒன்றையும் சரியாகச் செய்யமாட்டார். இரண்டு வேலைகளை ஒரே சமயத்தில் செய்யும் திறன் ஒரு சிலருக்கே அமைந்த ஒன்றாகும். நெப்போலியன் தாம் குதிரையில் சவாரி செய்யும்போதே தூங்கிக் கொள்வார் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அவ்வித அசாதாரணத் திறன் எல்லோருக்கும் அமைந்திருக்கும் என்று எதிர் பார்ப்பதற்கில்லை.

ஒரு வேலையுடன் இன்னொரு வேலை செய்யும்போது இரண்டையும் கெடுத்து விடுபவரே உலகில் அதிகம் என்று கூறலாம். பல விஷயத்தில் கவனங்களை பிரிப்பது நிச்சயமாகப் பலவீன நிலையாகும். கவனத்தை ஒரு விஷயத்தில் முழுதும் குவிப்பதே வலிமையாகும். அதனால் செஸ்டர் ஃபீல்ட் சொன்னார். "கவனத்தை நேராக, ஒரே ஒரு விஷயத்தில் செலுத்தும் திறனே மிக மேலான மேதைத் தன்மையின் மிக நிச்சயமான அடையாளம்" என்று.

அதனால்தான் ஐசக் நியூட்டன் கூறினார், "நான் அறிவியல் துறையில் ஏதாவது அபிவிருத்தி

செய்திருப்பேனாயின் அதற்குக் காரணம் பொறுமையான கவனத்தைத் தவிர்த்து வேறு ஒன்றுமல்ல" என்று. அதனால்தான் ரிட் பகர்ந்தார். "மேதைத் தன்மை என்று கூறத்தக்கது ஏதாவது இருக்குமாயின் அது ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் கவனத்தைக் குவிக்கும் திறனிலேதான் பொதிந்திருக்கிறது" என்று. அதனால்தான் ரோச்புகால்ட் புகன்றார், "கவனமின்மையால்தான் மனிதர்கள் தோல்வியுறுகிறார்கள்" என்று.

இயங்க வேண்டும், செயல்பட வேண்டும், உழைக்க வேண்டும், வாழ்வில் உயர வேண்டும் என்பதை உணர்ந்து முயலும்போது நமக்குத் துன்பங்கள் வரலாம். தோல்விகள் தொடரலாம். அந்நிலையில் பொறுமை இழக்காமல் மன அமைதியோடு, நிலைகுலையாது, சுறுசுறுப்போடு, கவனத்தோடு முயன்றால்தான் நாம் வெற்றியை அடைய முடியும். எது ஏற்பட்டாலும் ஆய்ந்து தேர்ந்ததை, தீர்மானித்துத் தொடங்கியதை மனம் தளராமல், மனம் மாறாமல், மனம் கோணாமல், மனம் நாணாமல் வெற்றி பெறும் வரை விடுவதில்லை என்னும் உறுதியுடன்! உத்வேகத்துடன் உழைப்பதே விடா முயற்சி எனப்படும்.

விடா முயற்சி என்னும் இவ்வரும் இயல்பைப் பெற்ற ஒருவன் ஆராயாமல் ஒன்றைத் தேர்ந்தெடுக்க மாட்டான்; அவசரத்தில் ஒரு காரியத்தில் இறங்கிவிட மாட்டான்; ஆய்ந்து தேர்வான், அமைதியாக முயலுவான். எது வந்தாலும் பிடித்த பாதையைவிட்டு நகர மாட்டான். என்னதான் ஏற்பட்டாலும் அப்பக்கம், இப்பக்கம் திரும்ப மாட்டான். அவன் செவி, அவன் நோக்கு, அவன் பார்வை, அவன் கவனம், அவன் சிந்தனை அனைத்தும் ஒரே பக்கத்தில்தான் திரும்பி இருக்கும். அந்த ஒரு பக்கம்தான் வெற்றியின் பக்கம்.

இடரோ, எதிர்ப்போ, தடையோ, தோல்வியோ குறைப்பதற்குப் பதிலாக பெருக்கும் அவன் உறுதியை; உள்ளழிப்பதற்குப் பதிலாக அதிகப்படுத்தும் அவன் ஆர்வத்தை,

வீழ்த்துவதற்குப் பதிலாக வேகப்படுத்தும் அவன் ஊக்கத்தை, அதற்கு காரணம் என்ன? அவன் வெற்றிக்கரு அமைந்த ஒன்றைத் தேர்ந்தெடுத்து இருக்கிறான். அதில் வெற்றி பெற்றே தீர்வது என்று உறுதிபூண்டிருக்கிறான்; "எவன் மிகவும் அதிக விடா முயற்சியுள்ளவனோ அவனுக்கே சொந்தமாகும் வெற்றி" என்னும் நெப்போலியனின் வாக்கை அறிந்திருக்கிறான். அதனால் அவன் இயற்றும் போரின் வேகம் கூடக் கூட அவன் வலிமை வளர்கிறது. திறன் பெருகுகிறது. ஆர்வம் அதிகரிக்கிறது. உறுதி உரமாகிறது. அவன் அயர்வதற்கு பதிலாக அதிக ஊக்கம் கொள்கிறான், தளர்வதற்குப் பதிலாகத் தாவிப் பாய்கிறான். நிச்சயமாக அறிஞர் ஒருவர் கூறியது போன்று இவனை, "விடா முயற்சி என்னும் அதிர்ஷ்டத்தின் திறவுகோலை" அடையப் பெற்றவன் என்று கூறலாம்.

விடா முயற்சியால் எதைத்தான் வெல்ல முடியாது? அதனை புளூட்டார்க் "சகல வலிமையும் அமைந்தது" என்று வர்ணிக்கிறார்.

வில்லியம் ஹெக்சன், "நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டிய பாடம் இது. முயலுங்கள், முயலுங்கள், மீண்டும், மீண்டும் முயலுங்கள்! முதலில் நீங்கள் வெற்றியுறாவிட்டால் முயலுங்கள், முயலுங்கள், மீண்டும், மீண்டும் முயலுங்கள்!" என்று கூறுகிறார்.

பென்ஹான், "விடாது முயலுங்கள்! அஞ்ச வேண்டாம்!" என்று பகர்கின்றார்,

செனேகா, "விடா முயற்சியும், அறிவோடு கூடிய விடாக் கவனமும் வெல்ல முடியாதது எதுவுமே கிடையாது" என்று புகல்கின்றார்.

ஜான்சன், "பெரு செயல்கள் பலத்தால் செய்யப் படவில்லை, விடா முயற்சியால்தான் ஆற்றப் பட்டிருக்கின்றன" என்று சொல்கிறார்.

ஷேக்ஸ்பியர், "ஒரு முறை தொடங்கப்பட்ட ஒரு செயல்

வெல்லப்படாதவரை விடப்படவே கூடாது" என்று செப்புகிறார்.

பேகன், "பெரும் விளைவுகள் அனைத்துமே உழைப்பாலும் விடா முயற்சியாலுமே விளைந்திருக்கின்றன" என்று சொல்கிறார்.

ஜான்சன், "நாம் பாராட்டக்கூடிய, நாம் பார்த்து வியக்ககூடிய அரிய செயல்கள் அனைத்தும் விடாமுயற்சி என்னும் எதிர்க்க இயலா வலிமையின் உதாரணங்கள்தாம்" என்று கூறுகிறார்.

சிம்ஸ், "வெற்றிக்கான நிபந்தனைகள் மிகவும் எளிதானவைதாம். அவையாவன: கொஞ்ச நேரம் நாம் உழைக்க வேண்டும், கொஞ்ச நேரம் பொறுக்க வேண்டும். ஆனால் எப்பொழுதும் நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும். ஒருபோதும் முன்வைத்த காலைப் பின் வைக்கக்கூடாது" என்று சொல்கிறார்.

பக்ஸ்டன், நான் ஒரு விதியைத்தான் பற்றிப் பிடித்துக் கொண்டிருக்கிறேன். என் வெற்றிக்கெல்லாம் அதுதான் காரணமாகும். சாதாரணத் திறமை தானிருந்தாலும், அசாதாரண விடா முயற்சி மட்டும் இருக்குமாயின் எல்லா விஷயங்களும் நம்மால் அடைய முடிந்ததாக ஆகிவிடும்" என்று கூறுகிறார்.

குட்ரிச் "பலவீனத்திற்கு வலிமை வழங்குவது விடா முயற்சிதான். அதுவே வறுமைக்கு உலகின் செல்வத்தையெல்லாம் திறந்து விடுகிறது" என்று சொல்கிறார்.

ஹெக்டர், "எவர் விடா முயற்சியுடன் செயலாற்று கிறார்களோ அவர்கள் வெற்றி முடி அணிவிக்கப் படுவர்" என்று பகர்கின்றார்.

புளூட்டார்க், செனேகா, பேகன், பக்ஸ்டன், குட்ரிச் இவர்களின் பொய்யாமொழிகள் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் கருத்தும், விடா முயற்சி கொண்டு ஆற்றப்பட முடியாத ஒன்று எதுவுமே கிடையாது என்பதுதான். ஆற்றப்பட

 

முடியாதவை என்று கருதப்பட்டவை அனைத்தும் ஆற்றப்பட்டது விடா முயற்சியைக் கொண்டு என்பதுதான்.

மனிதன் வானில் பறக்க முடியாது என்றுதான் கூறினார்கள். ரைட் சகோதரர்கள் தம் விடா முயற்சியால் பறக்க முடியும் என்று காட்டி விட்டார்கள். தொலைவிலுள்ளவர்களுடன் பேச முடியாது என்றுதான் கூறினார்கள். கிரஹாம்பெல் தம் விடாமுயற்சியால் பேச முடியும் என்று காண்பித்தார். நீருக்குள் பயணம் செய்ய முடியாது என்றுதான் கூறினார்கள். முடியும் என்று செய்து காட்டினார் ஒருவர். காசம் வந்தால் பிழைக்க முடியாது என்றார்கள். முடியும் என்று தம் விடா முயற்சியால் செய்து காட்டினார் வேறொருவர். சந்திர மண்டலத்திற்குச் செல்ல முடியாது என்று கூறினார்கள். செல்ல முடியும் என்று கூறிச் செய்து காட்டினார்கள் அமெரிக்கர்கள்.

பப்பன் தாம் ஆற்றிய சாதனைக்குக் காரணம் விடா முயற்சிதான் என்கிறார். நியூட்டன் தம் அறிவியல் கண்டுபிடிப்புகளுக்குக் காரணம் விடாமுயற்சிதான் என்கிறார். டாக்டர் பெண்ட்லி தாம் ஏதாவது ஆற்றியிருந்தால் அதற்கு காரணம் விடா முயற்சிதான் என்கிறார். கெப்ளர் தம் சாதனைக்குக் காரணம் விடா முயற்சிதான் என்கிறார். பீத்தோவன் தம் சாதனைக்குக் காரணமாய் கூறுவது விடா முயற்சியைத்தான். ஷேக்ஸ்பியர் தம் சாதனைக்கு காரணமாய்த் தெரிவிப்பது விடா முயற்சிதான். மைக்கேல் ஏன்ஜலோ தம் சாதனைக்கு காரணமாய் கூறுவது விடா முயற்சியைத்தான். டால்டன் தம் சாதனைக்கு காரணமாய் குறிப்பிடுவது விடா முயற்சியைத்தான்.

வ்லியம் ஹெக்சன், "விடாது முயலுங்கள்! வெற்றி உங்களுக்குத்தான்" என்கிறார். அதற்கு உதாரணம் இது. ராபர்ட் புரூஸ் பதினேழுமுறை ஆங்கிலேயர்களுடன் போரிட்டு தோற்றார். "இனிமேல் ஆங்கிலேயர்களை நம்மால் வெல்ல முடியாது" என்று மனம் ஒடிந்துபோய் ஒரு மலைக் குகையில் ஒளிந்து கொண்டிருக்கும்போது அவர், ஒரு சிலந்திப் பூச்சி வலை

பின்னுவதை கவனிக்க நேர்ந்தது. நூல் அறுந்து, அறுந்து போக, சிலந்தி கொஞ்சமும் மனம் தளராமல், விடாது மீண்டும், மீண்டும் முயலுவதை ராபர்ட் புரூஸ் கண்டார். முடிவில் அந்தச் சிலந்தி தன் கூட்டைக் கட்டியபின் தான் ஓய்ந்தது, இதனைப் பார்த்துக் கொண்டிருந்த ராபர்ட் புரூஸுக்கு ஒரு புது வேகமே பிறந்து விட்டது. "இந்தச் சிலந்தி எத்தனையோ முறை தோற்று மனம் தளராதபோது நாம் ஏன் தளர வேண்டும்? மீண்டும், மீண்டும் முயன்று இறுதியில் வெற்றி பெற்றபோது நாமும் ஏன் பெறக் கூடாது?" என்று எண்ணினார். மறுகணமே அங்கிருந்து கிளம்பினார். படையைத் திரட்டினார், இங்கிலாந்து மீது படை எடுத்துச் சென்றார். வெற்றி அவரை வரவேற்று நின்றது.

இந்தியாவில் கிறிஸ்தவ மதப் பிரச்சாரகரா யிருந்த காரே என்பவரிடம் சிறு வயதிலேயே விடா முயற்சி அதிகம் இருந்தது. ஒரு நாள் அவர் ஒரு மரத்தின்மீது ஏற முயன்றார். பாதி ஏறிச் செல்லும்போது கால் வழுக்கி விட்டது. கீழே விழுந்தார். நல்ல அடிபட்டு விட்டது. பல வாரங்கள் கால் ஒடிந்து படுக்கையாய்க் கிடந்தார். ஆனால் கால் சிறிது குணமானதும் நொண்டிக் கொண்டே சென்று அவர் செய்த முதல் காரியம் என்ன தெரியுமா? தன்னை வழுக்கிவிட்ட அந்த மரத்தின் மீது மீண்டும் ஏறியதுதான்.

இவ்விதத் துன்ப நிலையிலும் முயற்சியைத் தொடர்ந்தவர்கள்தாம் ஆடுபான், ஐசக் நியூட்டன், கார்லைல் ஆகியோர் ஆவர்.

ஆடுபான் ஓர் ஓவியர். ஒரு நாள் தாம் வரைந்த ஓவியங்களையெல்லாம் ஒரு பெட்டியில் வைத்துப் பூட்டி வீட்டில் வைத்துவிட்டு ஓய்வெடுத்துக் கொள்வதற்காக வெளியூருக்குக் கிளம்பினார். சில மாதங்கள் கழிந்து அவர் திரும்பி வந்து பெட்டியைத் திறந்தபோது அதில் அவர் எவ்வளவோ சிரமப்பட்டு வரைந்த ஓவியங்கள் அனைத்தும் துண்டு துண்டாகிக் கிடந்தன. அவற்றிற்கிடையில் ஒரு எலிக் குடும்பம் வாசம் செய்து கொண்டிருந்தது, அவர் இடிந்து இற்றுப் போய் விட்டார். பல

இரவுகள் தொடர்ந்து தூங்கினார். பிறகு மனத்தைத் தேற்றிக் கொண்டு கிளம்பி மூன்றாண்டுகள் முயன்று அந்த ஓவியங்களை யெல்லாம் திரும்பத் தீட்டி முடித்தார்.

ஐசக் நியூட்டனின் "டயமண்ட்" என்னும் பெயருள்ள அவருடைய செல்லப்பூனை ஒரு நாள் விளக்கை தட்டிவிட்டு அவர் பல ஆண்டுகள் பாடுபட்டு ஆராய்ந்து கண்டுபிடித்து எழுதி வைத்திருந்த குறிப்புக்களையெல்லாம் கொளுத்தி விட்டது, மனம் வருந்தினாலும், உளம் தளராமல் மீண்டும் அந்த ஆய்வுகளைத் திரும்பச் செய்து முடித்தார் நியூட்டன்.

கார்லைலின் "பிரெஞ்சுப் புரட்சி" என்னும் நூலை பிரசுரகர்த்தா அலட்சியமாய்ப் போட்டுவிட அதனை எவரோ எடுதது நெருப்பு பற்றவைக்கப் பயன்படுத்தி விட்டார்கள். அதனை அறிந்தபோது அதிர்ந்து போனாலும் கார்லைல் மனம் தளர்ந்து முயற்சியை அத்துடன் முடித்துக் கொள்ளாது மீண்டும் முயன்று எழுதி முடித்தார்.

இவ்வாறு சிற்ஸ் கூறுவது போன்று மனம் தளராமல், பொறுமையுடன், நம்பிக்கை இழக்காமல் ஆர்வத்துடன் உழைத்தவர்க்கே வெற்றியின் முடி அணிவிக்கப்படும் என்பதில் ஐயமுண்டோ?



# 4. முயற்சியின் பகை

விரும்பியதை முடித்துத் தருவது விடா முயற்சியாகும். அதற்கு துணை செய்பவை, பொறுமை, மன அமைதி, நிலைகுலையா மனநிலை, சுறுசுறுப்பு ஆகியவையாகும். அதற்குப் பகையான தன்மைகள் கீழ்வருவன : முயற்சியின் இறுதியில் வெற்றியின் முடியை அணிய வேண்டுமாயின் நாம் வெற்றிக்கு விரோதமான இத்தன்மைகள் நம்மை அணுகாமல் விரட்டி அடிக்க வேண்டும். எத்தனையோ வெற்றி பெற வேண்டிய முயற்சிகளை முடமாக்கியவை இவைதாம்; எவ்வளவோ பயன்படத்தக்க முயற்சிகளை வீணடித்தவை இவைதாம். எனவே, நாம் இவை பற்றி மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இவற்றில் ஒன்று நம்மிடம் இடம் பிடித்துக் கொண்டு விட்டாலும் போதும் நாம் அழிவதற்கு. இத்தன்மைகள் அனைத்தும் நம்மிடம் அமைந்திருக்க வேண்டும் என்னும் அவசியம் இல்லை. ஒன்றிரண்டு இருந்தாலே போதும், மனிதன் அதன் பின் உருப்படுவது அரிது. ஆகவே, வெற்றியின் இந்த விரோதிகள் விஷயத்தில் நாம் சிறிதும் அலட்சியம் காட்டக்கூடாது.

1.சோம்பல்.

2.மனத் தளர்ச்சி.

3.திறனில் நம்பிக்கையின்மை.

4.பொறுமை இன்மை.

5.அளவுக்கதிகமான உற்சாகம்.

6.தீர்மானமின்மை.

7.ஆழமற்ற தன்மை.

முயற்சியில் ஈடுபட மறுக்கும், வெறுக்கும் ஒருவித மனநிலையே சோம்பல் எனப்படும். அவ்விதத் தனமை அமைந்த ஒரு சோம்பேறியின் இயல்பு இதுதான். அவன் வேலை செய்யவே விரும்ப மாட்டான். எனவே, எவ்வித முயற்சியிலும் ஈடுபட அவன்

மனம் விழையாது. முயற்சியில் ஈடுபட்டால் படவேண்டிய சிரமம் பற்றி அவன் அஞ்சுவான். மண் அளவு சிரமத்தையெல்லாம் மலை அளவு சிரமமாக மனதில் வளர்த்துக் கொண்டு அந்த முயற்சி பற்றியே ஒருவகை வெறுப்பை ஏற்படுத்திக் கொண்டு விடுவான். அவன் விரும்புவதெல்லாம் இதுதான். அவன் வேலை செய்ய விரும்பவில்லை. ஆனால் ஏதாவது செய்துதான் ஆக வேண்டுமென்றால் அந்த வேலை இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அவன் எண்ணுவான். அந்த வேலையில் சிரமம் எதுவும் இருக்கக்கூடாது. அதில் மனத்தை ஒருமுகப்படுத்த வேண்டிய அவசியம் அறவே இருக்கக் கூடாது. அதில் தோல்வியோ துயரோ குறுக்கிடக்கூடாது. அப்படி குறுக்கிட்டாலும் தொடர்ந்து முயலவேண்டிய அவசியம் இருக்கக் கூடாது. முடிவாகத் தொடர்ந்து செயலாற்ற வேண்டியே இருக்கக்கூடாது.

அவனுக்கும் உழைப்பிற்கும் வெகு தொலை இருக்கும். அவன் விரும்புவதெல்லாம் உழைக்கக் கூடாது. உண்ண வேண்டும். வேலை செய்யக்கூடாது. வேண்டுமளவு சுகம் அனுபவிக்க வேண்டும். அசையக் கூடாது, ஆடக் கூடாது. ஆனால் அவன் விரும்புவதெல்லாம் உடனே வந்து சேர வேண்டும்.

காலையில் துயிலெழுவதை அவன் கடும் துன்பமாகக் கருதுவான். கைகளை வீசிக் கொண்டு ஒரு வேலையுமில்லாமல் அலைவதையே அவன் விரும்புவான். பகலுக்கும் இரவுக்குமிடையில் அவனுக்குப் பாகுபாடே இருக்காது. இரண்டுமே உறங்குவதற்கானதுதான் என்பதே அவன் கொள்கையாகும். உழைத்து உண்ணலாம் என்னும் எண்ணம் போய் எவராவது ஒரு கப் காப்பி வாங்கித் தரமாட்டார்களா என்று கால்சராய் பைக்குள் கையை விட்டுக் கொண்டு தெருமுனைகளில் நின்று கொண்டிருப்பான்.

ஒரு வணிகனுக்கு மிகவும் பிரியமான இடம் அவன் வாணிபம் செய்யும் கடையாக இருக்கும். ஒரு வழக்கறிஞனுக்கு

மிகவும் விருப்பமான இடம் அவன் வாதிடும் வழக்கு மன்றமாகும். வணிகனுக்கும், வழக்கறிஞனுக்கும் வாழ்வில் வெற்றி பெற்றுத் தருபவை இந்த இடங்கள்தாம். இவ்வாறே ஒவ்வொருவருக்கும் அவர் தொழில் செய்யும் இடம் பிரியமானதாயிருக்கும். ஆனால் சோம்பேறிக்கு அவன் தொழில் செய்ய வேண்டிய இடம் கொலைகளமாகக் காட்சி தரும். வேலை செய்ய வேண்டிய இடத்தைப் பார்த்து அவன் அவ்வளவு அஞ்சுவான். அருவருப்பான். அதனால் வளமும் வாகையும் அவன் வாழ்வில் வருவதற்கே இடமில்லாதிருக்கும். வறுமை ஒன்றே அவனுக்கு நீங்கா நண்பனாயிருக்கும். புதை குழிக்கு செல்லும்வரை கூட அது அவனை விட்டுப் பிரியாது.

பிறக்கும் குழந்தையின் இரு கைகளுக்கும் சம அளவு பலம் தானிருக்கும். ஆனால் அது வளர்ந்து வாலிபப் பருவம் அடையும்போது வலக்கையால் தூக்க இயன்ற ஒன்றை இடக்கையால் செய்ய இயலாது போகிறது. இதற்குக் காரணம் என்ன? வலக்கைக்கு அளிக்கப்பட்ட அளவு உழைப்பு இடக்கைக்கு வழங்கப்படவில்லை. அதனால்தான் இடக்கை, வலுகுன்றி வலக்கைக்கு இளைத்து விடுகிறது. அதேபோல்தான் சோம்பேறி தன் அறிவிற்கும் உடலிற்கும் வேலை கொடாது வலு குன்றச் செய்து விடுகிறான். அதனால்தான் ஜெரமி டெய்லர் கூறினார். "உயிர் வாழும் மனிதனைப் புதைப்பதாகும் சோம்பல்" என்று. அதனால்தான் செஸ்டர்பீல்ட் பிரபு சொன்னார், "முயற்சி ஆற்றாது முடங்கிக் கிடக்கும் சோம்பலை நான் ஒருவிதத் தற்கொலையாகவே கருதுகிறேன். ஏனெனில், சோம்பலால் தாக்குண்ட மனிதனிடமுள்ள மனிதன் நல்ல முறையில் அழிக்கப்பட்டு விட்டான். அவனிடமுள்ள விலங்குத் தன்மை உயிர் வாழ்ந்த போதிலும்" என்று. சோம்பல் என்பது ஒருவித இறப்புத்தான். இறந்தவனால் ஒன்றும் செய்ய முடியாது. சோம்பேறி ஒன்றும் செய்ய மாட்டான். இயங்காதிருப்பது வரையில் இருவர் நிலையும் ஒன்றுதான். ஆனால் இந்தப் பிணம் இயங்காவிட்டாலும் உண்ணும், உடுத்தும். ஆனால் அந்தப் பிணம் பற்றியவரை ஒரு சௌகரியம் அது உண்ணாது

உடுத்தாது. அதனால் பிறருக்கு உபத்திரவமும் இல்லை.

வாதம் பெரும்பாலும் ஒரு பக்கம் தாக்கி, உடல் உறுப்புகளை இயங்காமல் செய்யும். ஒரு கண் சுழலாது. ஒரு கை இயங்காது. ஒரு கால் நிற்காது. ஆனால் சோம்பல் என்னும் வாதம் முழு உடலையுமே இயங்காமல் செய்துவிடும். இதனால் சோம்பேறி பாதி அளவு உயிர் வாழும் மனிதனாக அல்லது பாதி இறந்த மனிதனாக இருப்பான். அதனால்தான் ஜே.ஜி. ஹாலண்ட் சொன்னார், "சோம்பல் உயிர் வாழும் மனிதனின் பலிபீடம்" என்று. அதனால்தான் அறிஞர் ஒருவர் கூறினார், "சோம்பல் துருவைப்போல் மனிதனை அரித்துவிடும்" என்று. அதனால்தான் ராபர்ட் பர்ட்டன் பகர்ந்தார். "சோம்பல் எல்லோரையும் வீழ்த்திவிடும்" என்று.

சோம்பலும் வறுமையும் இணைபிரியா நண்பர்களாவர். ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்து ஒரு கணம்கூட இருப்பது கிடையாது. எங்குச் சோம்பல் உள்ளதோ அங்கு வறுமை அவசியம் இருக்கும். ஆனால் அறிஞர் ஒருவர் சோம்பலும் வறுமையும் நண்பர்கள் அல்லர், தாயும் பிள்ளையும் ஆவர் என்கிறார். வறுமையைப் பெற்றிருப்பதே சோம்பல்தான் என்பது அவர் கருத்து. அதனால் அவர் சோம்பலை வறுமையின் தாய் என்று வருணிக்கிறார். இதனை வலியுறுத்துவது போல் இன்னோர் அறிஞர் "சோம்பல் ஒருவனைக் கந்தைகளால் போர்த்தும்" என்று புகல்கிறார். ஸ்பர்ஜியனோ "இரப்பதின் திறவுகோலே சோம்பல்தான். எல்லாத் தீமைகளின் மூலமும் அதுதான்" என்று கூறுகிறார். பெஞ்சமின் பிராங்க்ளினோ, "சோம்பல் எவ்வளவு மெதுவாக நடக்கிறது. வறுமை அதனை மிக விரைவில் தாண்டிச் சென்றுவிடும்" என்று சொல்கிறார்.

சோம்பல் வறுமையை மட்டும் வழங்கவில்லை. அதுதான் தீமையையும் வரவழைக்கிறது. தேங்கி கிடக்கும் நீரில் பூச்சிகள் உண்டாகின்றன, அதேபோல இயக்கமில்லாத சோம்பேறியின் மூளையில்தான் தீய சிந்தனைகள் தழைக்கின்றன. அதனால்தான் அறிஞர் ஒருவர் சோம்பலைச் சாத்தானின்

தலையணை என்று வருணிக்க மற்றோர் அறிஞர் சோம்பேறியின் மூளையை சாத்தானின் ஆலை என்று வருணித்தார். சாத்தானுக்கும் சோம்பலுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு என்பதையே இவர்களின் மொழிகள் மெய்ப்பிக்கின்றன. சாத்தானுக்கு ஏற்ற தோழன் சோம்பேறி. சாத்தான் விளையாடத் தகுந்த களம் அவனுடைய மூளை. அதனால்தான் சோம்பலை "பாவத்தின் தாதி" என்று ஸ்பென்சர் கூற, அதனை "தீமையின் தாய்" என்று ஜான் லிட் சொல்ல, அதனை "சாத்தானின் சகோதரன்" என்று சாஸர் வருணிக்கிறார்.

மிகப் பெரும் விகடப் புலவர் என்று கூறப்படும் அபூ நவாஸிற்கு அவர் பிறந்த ஊரில் ஒரு நினைவுச் சின்னம் கட்டப்பட்டுள்ளது. நான்கு சுவர்கள். ஒவ்வொரு சுவருக்கும் இடையில் நான்கு ஆள் சென்று வரத்தக்க இடைவெளி, சுவர்கள் ஒன்றை ஒன்று தொட்டுக் கொள்ளவே இல்லை. நான்கு சுவர்களும் ஒன்றுக்கொன்று ஒரு தொடர்புமின்றி பூமியில் புதைந்து வானில் எழுந்து நிற்கின்றன. இந்த சுவர்களில் ஒன்றில் ஒரு கதவு உண்டு. அது பெரிய பூட்டு கொண்டு பூட்டப்பட்டுள்ளது. இறக்கும்போது கூட விகடம் செய்ய மறக்காத அவரின் நினைவுச் சின்னத்தைப் பார்த்ததுமே மக்கள் சிரிக்க வேண்டு மென்றே இவ்வாறு செய்யப்பட்டுள்ளது.

நான்கு சுவர்கள் இருந்தும் பெரிய பூட்டைக் கொண்டு பூட்டியிருந்தும் அதற்குள் நான்கு பேர் அல்ல. நாற்பது பேர் செல்லலாம் அல்லவா? இதற்காவது சுவர்கள் என்றாவது ஒன்று உண்டு. ஆனால் சுவர்களே இல்லாத வீடு ஒன்று உண்டு என்று சாஸர் கூறுகிறார். அத்தகைய வீடு யாது? அதுதான் சோம்பேறி. அவன் சுவர்களற்ற வீடாவான். திறந்திருக்கும் வீட்டிலே நாய் நுழைந்துவிடும். சுவர்களே அற்ற வீட்டிற்குள் சாத்தான் நுழையக் கேட்கவா வேண்டும். "அவன் எல்லாப் பக்கங்கள் வழியாகவும் உள்ளே நுழைந்து விடுவான்" என்கிறார் சாஸர். அதனால்தான் தாமஸ் பேக்கன், "சோம்பல் எல்லாத் தீமைகளின் ஊற்று, உற்பத்தி ஸ்தானம்" என்று கூறினார்.

திறந்திருக்கும் வீடு உள்ளே நுழையுமாறு நாயைத் தூண்டுகிறது. "திறந்து வைத்திருக்கும் க்தவு துறவியைக் கூடக் கெடுத்துவிடும்" என்று ஒரு பழமொழி உண்டு. திருடுவதற்கு வாய்ப்பு உள்ள நிலையில் திருடாதிருப்பதற்கு அதிக மன உறுதி வேண்டும். நல்ல சூழ்நிலையில் நல்லவனாயிருப்பதே திறமை அல்ல. தீய சூழ்நிலையில் நல்லவனாயிருப்பதே கெட்டிக்காரத்தனமாகும். தீமை அவ்வளவு மனிதனை கெடுக்கவல்லதாகும். யாரும் கவனியாமல் ஒரு மோதிரம் கிடந்தால் அது எவ்வளவோ பேரின் மனத்தை பேதலிக்கச் செய்யும் தெரியுமா? "சும்மா கிடந்தது, எடுத்தேன்" என்று கூறுவோர் எவ்வளவோ பேர் உண்டு. வேலை செய்யாத சோம்பேறி சும்மா கிடக்கும் பொருள் போன்றவன். திறந்திருக்கும் வீடு போன்றவன். கதவில்லா கட்டடம் போன்றவன். சுவர்களே இல்லா மனை போன்றவன் . அவனைப் பார்த்ததும் கொஞ்சம் சீண்டிப் பார்ப்போமே, கொஞ்சம் எடுத்துப் பார்ப்போமே என்னும் எண்ணம் ஏற்பட்டு விடுகிறதாம் சாத்தானுக்கு. அவ்விதம் சோம்பேறி நல்லவனாயிருக்கும் சாத்தானையே கெடுத்து விடுகிறானாம், திறந்திருக்கும் வீடு துறவியையே கெடுத்து விடுவதுபோன்று. அதனால்தான் ஹால் சொன்னார், "சோம்பேறி சாத்தானையே தனக்கு தீமை செய்யுமாறு தூண்டி விடுகிறான்" என்று.

சோம்பல் தீமையை மட்டும் வரவழைக்கவில்லை. அது துன்பத்தையும், துயரத்தையும் வரவழைக்கிறது என்பது உண்மையாகும். வறுமை என்பது கொடும் துயரம்தான். தீமை என்பது அதனினும் கொடிய துன்பம் ஆகும். அவற்றை விடக் கொடிய துயரங்களை வழங்குவதாகும் சோம்பல் என்பது அறிஞர் பலரின் கருத்தாகும். "சோம்பல் என்பது பல துயரங்களுக்கும் சேர்த்து இடப்பட்ட கூட்டுப் பெயர்" என்று ரிட்சர் கூறுகிறார். "சோம்பலைவிடத் துயரத்திற்கு வேறு பெரிய காரணம் எதுவுமே கிடையாது" என அறிஞர் ஒருவர் சொல்கிறார்.

சோம்பேறிகளைக் காலத்தைக் கொலை பண்ணுபவர்கள் என்று கூடக் கூறலாம். தேர்வு எழுதும்போது காலம் பறப்பதைப்போல் தோன்றுகிறது. வெறுமனே ஒரு வேலையுமில்லாமல் இருக்கும்போது நேரம் ஓடாதிருப்பதுபோல் தோன்றுகிறது. இதற்குக் காரணம் என்ன? தேர்வு எழுதும்போது கடிகாரம் வேகமாய் ஓடவுமில்லை, வேலையில்லாது வெறுமனே இருக்கும்போது கடிகாரம மெதுவாக ஓடுவதும் கிடையாது. வேலைதான் அவ்வித மன மாயைகளை உண்டு பண்ணுகிறது. சோம்பேறிக்குக் காலம் ஓடுவதாகவே தெரியாது. அவனையே அறிஞர் ஒருவர், "முட்கள் அற்ற கடிகாரம்" என்று வருணித்தார். முட்கள் அற்ற கடிகாரமான அவனோ கடிகாரங்களுக்கு முட்களே இல்லையா என்று எண்ணுகிறான். இருந்திருந்தால் அது நகர்ந்திருக்குமல்லவா என்று கருதுகிறான், உண்மையில் அவனுக்கு அப்படித்தான் தோன்றும் என்கிறார் சாமுவேல் ஜான்சன். "காலம் இப்படி பறக்கிறதே" என்று எல்லோரும் கருதும்போது, "ஏன் அது இப்படி மெதுவாகச் செல்கிறது?" என்று எண்ணுவானாம் சோம்பேறி.

மனிதனை நடமாடும் பிணமாக்குவது சோம்பேறித் தனம். அதனால்தான் பிளாடஸ் பரிவோடு வேண்டுகிறார், "உங்கள் சோம்பலுடன் போராடுங்கள்! நாடு கடத்துங்கள் உங்கள் சோம்பேறித் தனத்தை!" என்று. அதனை எப்படி நாடு கடத்துவது? நாகதாளி வேர் இருக்கும் இடத்திற்கு பாம்பு வராது என்று கூறுவார்கள். ஒளியுள்ள இடத்திற்கு இருள் வராது என்பது எல்லோருக்கும் தெரியும். பகலவன் கிளம்பிவிட்டானானால் அதன்பின் பனிக்கு இடமில்லை. அதேபோல் எங்கு உழைப்பு இருக்கிறதோ அங்கு சோம்பேறித்தனம் இராது. ஆகவே, சோம்பேறித் தனத்தை நாடு கடத்துவதற்கு நல்ல வழி அதற்கு உழைப்பைக் கொண்டு ஓங்கி உதை கொடுப்பதுதான். அதனால்தான் அறிஞர் செனேகா, "சோம்பேறித் தனத்தால் விளையும் தீமைகளை விலக்குவதற்கு உழைப்பைப்போல் அவ்வளவு நிச்சயமான பரிகாரம் எதுவுமே கிடையாது" என்று சொன்னார்.

விடாமுயற்சியின் அடுத்த விரோதி மனத் தளர்ச்சியாகும். எடுத்த முயற்சியில் இன்னல், எதிர்ப்பு, தடை, தோல்வி ஏற்படும்போது முயற்சியைத் தொடர விடாது முடமாக்குவது மனத் தளர்ச்சிதான். முயற்சியைத் தொடங்கும் முன்னரே இன்னலும், எதிர்ப்பும் தடையும், தோல்வியும் எதிர்படும் என்பதை அறிந்து அதற்கான ஆயத்த மில்லாதவரே மனம் தளர்ந்து போய் விடுவார்கள். மனித முயற்சி எதுவும் எடுத்ததும் வெற்றியை ஈந்ததில்லை என்னும் உண்மையை அறிந்த ஒருவன் தற்காலிகத் துன்பங்களைக் கண்டு ஒருபோதும் மனம் தளர்ந்துவிட மாட்டான். போர்க்களம் செல்லும் வீரனை எவரும் மலர்மாலை வைத்து வரவேற்க போவதில்லை. அவ்விதம் எதிர்பார்ப்பவன் அறிவற்றவனாயிருக்க வேண்டும் அல்லது பைத்தியக்காரனாயிருக்க வேண்டும். அறிவுள்ள எவனும் அவ்வித வரவேற்பு தனக்கு காத்திருக்கும் என்று எதிர்பார்க்க மாட்டான். களத்தில் அம்புகள்தாம் வரவேற்கும், ஈட்டிகள் தாம் முகமன் கூறும். அம்புகளையும், ஈட்டிகளையும் பார்த்துவிட்டு பகை வெல்லக் களம் கிளம்பிய ஒருவன் பின் வாங்கலாமா? பின் வாங்கினாலும் "என்ன, களம் இப்படி இருக்கிறது?" என்று மனம் தளரலாமா? அதேபோலதான் முயற்சி என்றால் அது முட்கள் நிறைந்த களம்தான். அதில்தான் நடந்து செல்ல வேண்டும். வெற்றியின் கனி நமக்கு வேண்டுமாயின், முள் நிறைந்திருக்கிறதே என்று மனம் தளர்வதில் பொருளே இல்லை. பலாப்பழத்தில் சடையே இருக்கக்கூடாது. ரோஜாச் செடியில் முள்ளே இருக்கக்கூடாது. பாகற்காயில் கசப்பே இருக்கக்கூடாது என்று எதிர்பார்ப்பது எப்படிப் பேதமையோ அப்படிப் பேதமையாகும். முயற்சியில் துன்பங்கள் இருக்கக் கூடாது என்று எதிர்பார்ப்பது.

அறிவோடு ஆய்ந்து தீர்மானத்தோடு, முயலும் அலுவலில் வெற்றி பெறாது ஓய்வதில்லை என்னும் உறுதியை மனத்தில் உண்டு பண்ணிக் கொண்டவன் ஒருபோதும் இந்தத் துன்பங்களைக் கண்டு மனம் தளர மாட்டான். அதற்கு மாறாக அதிக ஆர்வம் கொள்வான். அதிக உறுதி கொள்வான். வெற்றி

கிட்டும்வரை உழைத்துக் கொண்டே இருப்பது என்பதுதான் அவன் கொள்கையாகும். தோல்வி என்று அவனுக்கு ஒன்றும் கிடையாது. அதற்குக் காரணம் என்ன? அவன் தோல்வியுடன் எதனையும் விட்டுவிடுவதில்லை. அதனை வெற்றிக்கு இழுத்துச் செல்லாது அவன் ஓய்வதும் கிடையாது. விழுந்து எழுந்தவர்களே இன்று உயிர் வாழும் அத்தனை மனிதர்களும். இன்று இருக்கும் உலகமே விழுந்து எழுந்து முயன்றதன் நேரடிப் பலன்தான். விழுந்ததும் ஏழாது மனம் தளர்ந்திருந்தால் உலகமே உண்டாகியிராது என்பது உண்மையாகும்.

மனத் தளர்ச்சிக்கு முக்கிய காரணங்கள் மூன்று. அவையாவன: அச்சம், சோம்பல், பொறுமையின்மை. முயற்சியில் இடையூறுகள் எதிர்ப்பட்டதும கோழை மனம் கொண்டவர்களுக்கு "இனிமேல் எப்படி ஆகுமோ" என்று ஒருவித அச்சம் ஏற்பட்டு விடுகிறது. அதனால் "இத்துடனாவது பிழைத்துக் கொள்வோம்" என்று முயற்சியை அப்படியே விடுவது இழிந்த இயல்பாகும். "எத்தனையோ திறமைசாலிகள் சிறிதளவு துணிவின்மையால் உலகில் அழிந்து பட்டிருக்கின்றனர்" என்கிறார் சிட்னி ஸ்மித். அவர் கூறியதுபோல் வெற்றியை ஈனக்கூடிய முயற்சிகளைச் சிறு சிறு இடையூறுகளைக் கண்டதும அஞ்சி அப்படியே விட்டு அழிந்தவர் தொகை மிகவும் அதிகமாகும்.

முயற்சியில் இடையூறுகள் குறுக்கிட்டதும் "என்ன இதற்கு மேல் செய்வது" என்று கூறி அதனை விட்டுவிடுவோரும் உண்டு. இதற்குக் காரணம் சோம்பல்தான். சோம்பல் எவ்வளவு மோசமானது என்பதை நாம் அறிவோம்.

இடையூறுகளை எதிர்த்து நிற்கும் ஆற்றல் சிலருக்குக் கிடையாது. இவர்களை நெய்யில் பொரித்த பண்டத்திற்கு ஒப்பிடலாம். நெய்யில் பொரித்த பொருள்மேல் எதையாவது வைத்தால் அது பொடிப் பொடியாக ஆகிவிடும். அதுபோல் இவர்களும் இடையூறுகள் எதிர்பட்டதும் இற்று நொறுங்கிப் போய்விடுவர். துன்பங்களைத் தாங்கும், பொறுக்கும் உறுதியோ,

உரமோ அறவே இல்லாதிருக்கும் இவர்களிடம்.

இம்மூவகையினரும் துன்பங்கள் ஏற்பட்ட பின்னரும் முயற்சியை முனைந்து முடிப்பது என்பது அரிது. "நல்லவேளை இத்துடனாவது விட்டுத் தொலைத்தோம்" என்று எண்ணிக் கொள்வார்கள் அவர்கள். ஆனால் அவர்கள் அறிய மாட்டார்கள். அவர்கள் விட்டதற்கு அடுத்த கட்டம் வெற்றியின் கட்டம் என்னும் உண்மையை. "நல்ல வேளை, இழப்பிலிருந்து தப்பித்தோம்" என்று எண்ணிக் கொள்வார்கள். ஆனால் அவர்கள் அறியமாட்டார்கள் எவ்வளவு பெரிய இழப்பைத் தமக்கே தாம் உண்டு பண்ணிக் கொண்டார்கள் என்னும் உண்மையை.

விடா முயற்சியின் அடுத்த விரோதி ஒருவன் தன் திறனில் நம்பிக்கை பெற்றிராததாகும். எல்லோரையும் போல் நாமும் ஏதாவது செய்ய வேண்டும் என்று சிலர் எதையாவது முயல்வர். முயற்சியில் இடையூறு ஏதாவது குறுக்கிடும். அவ்வளவுதான். "நமக்குத் திறமை போதாது" என்னும் எண்ணம் ஏற்பட்டுவிடும் அவர்களுக்கு. அத்தன்பின் அந்த முயற்சியைத் தொடர்வதற்கு அவர்களிடம் மனம் அறவே இடம் கொடாது. அது முற்றிலும் நம்பிக்கை இழந்து போயிருக்கும். இது மிகவும் அபாய நிலையாகும். பட்டுப்போன மரம் பிழைப்பது எவ்வளவு அரிதோ அவ்வளவு அரிதாகும் தன் திறனில் நம்பிக்கை இல்லாதவன் செயல்புரிவது. உண்மையில் மனிதனுக்கு அளப்பரிய ஆற்றல் அளிக்கப்பட்டுள்ளது. அளிக்கப்படாமலா அவன் அகிலத்தை அளந்தான். ஆகல் கடலை வென்றான், வானத்தில் வலம் வந்தான். வான் சுழலும் கோளத்தைக் குறி வைத்தான்? இன்றைய யுகத்தைத் தம் யுகமாகவே ஆக்கிக் கொண்ட ஆல்பர்ட் ஈன்ஸ்டீன் அசாதாரண அறிவு பெற்றவர் என்று கூறுகிறார்கள். அவர் கூடத் தமக்கு ஆண்டவனால் அளிக்கப்பட்ட அறிவுத் திறனில் இலட்சத்தில் ஒரு பகுதியைக் கூடப் பயன்படுத்தவில்லை என்று சொல்கிறார். அவ்வாறாயின் மனிதனுக்கு எவ்வளவு அறிவு திறனும் ஆண்டவனால் அளிக்கப்

பட்டிருக்கிறது? அப்படி அளிக்கப்பட்டிருக்க மனிதன் "நமக்குத் திறன் போதாது" என்று கருதுவது எவ்வளவு பெரிய அறிவீனமாகும்.

முயற்சியில் இடையூறுகள் எதிர்ப்படுவது இயற்கை. அதைக் கண்டு நம்பிக்கை இழப்பது அறியாமையாகும். வெற்றிக்கு நம்பிக்கை மிக மிக அவசியமாகும். நம்பிக்கை மட்டும் நமக்கு உறுதியாக அமைந்திருக்குமாயின் இடையூறுகள் நம்மை எதுவும் செய்துவிடாது. ஆனால் நம்பிக்கை நம்மிடம் இல்லாவிடில் அணுவளவு துன்பம்கூட நம்மை அகல பாதாளத்திற்குள் தள்ளிவிடும்.

முயற்சியில் ஈடுபடும் பலர் நம்பிக்கை இழப்பதற்குக் காரணம் அவர்கள் தம் திறனில் போதிய நம்பிக்கை கொள்ளாதிருப்பது ஒன்று. மற்றொன்று அவர்கள் முன்பு செய்த முயற்சியில் துன்பங்கள் ஏற்பட்ட கைப்பான அனுபவம். ஒருமுறை துன்பங்களைக் கண்டுவிட்ட பின் இவர்களால் மீண்டும் நம்பிக்கை கொள்ள இயலுவதில்லை. நம்பிக்கை இல்லாவிட்டால் எதுவுமே சாதிக்க முடியாது. இந்நிலையில் இவர்கள் வாழ்வு பரிதாபகரமாய் முடிவதை எவராலும் தடுக்க முடியாது. கீழே விழுந்துவிட்டால் என்ன? அதன்பின் நம்மால் நடக்க முடியாது என்று காலமெல்லாம் உட்கார்ந்தே இருந்து விடுவதா? குழந்தை அப்படி இருப்பதில்லை. அதனால்தான் அது நடக்கக் கற்றுக் கொள்கிறது. எனவே, எடுத்த முயற்சி எதிலாவது சங்கடம் எதுவும் நேர்ந்திருந்தால் அதற்காக நம்பிக்கை இழந்துவிட வேண்டாம். நிச்சயம் அடுத்தடுத்து முயன்றால், வெற்றி கிடைப்பது உறுதி. எத்தனையோ முறை "இன்சால்வென்ஸி" கொடுத்தவர்கள் தமக்கேற்பட்ட அந்தப் பெரும் தோல்வியைத் தோல்வியாகவே கருதாது மீண்டும் முயன்று வாழ்வில் உயர்ந்து வாகை சூடியிருக்கிறார்கள். வெடிகுண்டுக்குத் தம் இரு கைகளையும் இழந்தார் கஹ்ரால்டு ரஸ்ஸல். அது இராணுவத்தில் பெரும் பதவி பெற்று உயரவேண்டும் என்னும் அவரின் முயற்சியில் ஏற்பட்ட பெரும்

தோல்விதான். ஆனால் அந்த தோல்வியையே அவர் வெற்றியாக மாற்றிவிட்டார். இழந்தத் தம் இரு கைகளையுமே முதலாக வைத்து முயன்று வாழ்வில் உயர்ந்தார்.

துன்பங்கள் வெற்றிக்குச் செல்லும் முயற்சிப் பாதையிலுள்ள தடைகள்தாம். அவற்றிற்கு அப்பாலும் பாதை செல்லத்தான் செய்கிறது. அதன் இறுதியில்தான் இருக்கிறது வெற்றிபுரி. வழியில் ஒரு கல் தடுக்கி விட்டதற்காக வழியிலிருந்த ஒரு குழியில் விழ நேர்ந்ததற்காக பாதையைவிட்டு விலகுவதோ, திரும்பி விடுவதோ அறிவுடைமை ஆகாது. அவ்விதம் செய்வோர் ஒருபோதும் வெற்றிபுரியை அடையவும் முடியாது.

முயற்சியில் துன்பம் ஏற்பட்டுவிட்டால் அத்துடன் முயற்சியை முடித்துக் கொள்வதற்குப் பதிலாக அத்துன்பம் பற்றி ஆராய்ந்து பார்க்கலாம். முயற்சியிலுள்ள குறை, நம்மிடமுள்ள பலவீனம் இவற்றை ஆய்ந்தறிந்து அகற்ற முயலலாம். மெயின் ஸ்விட்சை "ஆப்" செய்துவிட்டு விசிறி ஓடவில்லையே என்று கூறலாமா? அப்படி அது ஓடாததற்காக அத்னை இயக்குவதையே நிறுத்திவிடலாமா அல்லது அதனைக் கழற்றி எறிந்துவிடலாமா? விசிறி ஓடவில்லை என்றால் அதற்கான காரணம் என்னவென்று பார்த்து அறியலாம். அறிந்த பின் அதனைக் களைய முயலலாம், அதுதான் உகந்த முறையாகும். முயற்சியில் தோற்பதற்குப் பல காரணங்கள் உண்டு. அதனை அறிந்து அகற்றிவிட்டு, மீண்டும் முயன்று ஏன் வெற்றியை ஈட்டிக் கொள்ளக் கூடாது?

இன்னும் சிலருக்கு நம்பிக்கை ஏற்படாததற்குக் காரணம் அவர்களின் நண்பர் அல்லது அயலார் அடைந்த துன்பங்கள் அல்லது தோல்விகளாகும். தேர்வு எழுதிய நம் நண்பன் தோற்றுப் போனால் நாம் நம்பிக்கை இழப்பதில் பொருளே இல்லை. அவன் தோற்றதற்கு எவ்வளவோ காரணங்கள் இருக்கலாம், அவன் தோற்றால் நாமும் தோற்க வேண்டும் என்று ஏதாவது விதியா? அவன் தோற்றால் அவன் தோற்றதற்கான

காரணத்தை அறிந்து நாம் அகற்றினால் நாம் ஏன் வெற்றிபெற முடியாது?

தேர்வுகளில் ஒவ்வோர் ஆண்டும் எவ்வளவோ பேர் தோல்வியுறத்தான் செய்கிறார்கள். அதைப் பார்த்து விட்டுப் பள்ளிக்குச் செல்லாமல் எவரும் இருப்பதில்லை. நிச்சயமாக நமக்கு மட்டும் நம்மீது நம்பிக்கை இருக்குமாயின் நம் நண்பன் தோல்வியுற்ற இடத்தில் நாம் வெற்றி பெற முடியும்.

தோல்வியால் துவண்டு விடாது, துணிந்து நின்று நம்பிக்கையுடன் செயலாற்றி வெற்றி பெற்று விட்டோமாயின் அதன்பின் நமக்குத் தானாகவே ஒரு நம்பிக்கை ஏற்பட்டு விடும். எந்தக் காரியத்தையும் சாதித்துவிடலாம் என்று, இன்னலோ, எதிர்ப்போ, தடையோ, தோல்வியோ ஒன்றும் செய்து விடாது. அவை நாம் நினைத்ததுபோல் வெல்ல முடியாதவை அல்ல என்னும் நம்பிக்கை ஏற்பட்டுவிடும் நமக்கு. ஒரு மாணவன் ஒருமுறை தேர்வில் தோற்றான். அவன் நம்பிக்கை இழக்கவில்லை. மீண்டும் முயன்று வெற்றி பெற்றுவிட்டான். வெற்றி பெற்றபின் அவனுக்கு ஓர் அசாதாரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தோல்வி என்பது நாம் நினைத்ததுபோல் அவ்வளவு பெரிய தடை அல்ல. அதனை நாம் நினைத்தால், நம்பிக்கையோடு முயன்றால் நிச்சயம் வென்றுவிட முடியும் என்னும் நம்பிக்கைதான் அது. அதன்பின் கூட அவன் ஓரிருமுறை தேர்வில் தோல்வியுறத்தான் செய்தான். ஆனால் அவற்றைத் துச்சமாக கருதி, துவளாமல் முயன்று வெற்றி பெற்றுவிட்டான். இன்று அவன் ஒரு வெற்றிகரமான மருத்துவனாக விளங்குகிறான்.

விடா முயற்சியின் அடுத்த விரோதி பொறுமை இன்மையாகும். பொறுமை இன்மையை அவசரம் என்று கூறலாம். முயற்சி முற்றிக் கனிய காலம் தேவை. பிஞ்சு, கனியாகக் காலம் தேவை இல்லையா? முட்டை குஞ்சாகக் காலம் தேவை இல்லையா? குழந்தை மனிதனாகக் காலம் தேவையில்லையா? பிஞ்சு உடனே பழமாக வேண்டுமென்றோ,

முட்டை உடனே குஞ்சாக வேண்டுமென்றோ, குழந்தை உடனே மனிதனாக வேண்டுமென்றோ எதிர்பார்க்கலாமா? நாம் எதிர்பார்த்தபடி ஆகாவிட்டால் அதற்காக மனம் தளரலாமா, நம்பிக்கை இழக்கலாமா, பொறுமை அழியலாமா? அதேபோல்தான் முயற்சி முற்றிக் கனிய வேண்டுமாயின் அதற்கு காலம் தேவை. சில முயற்சிகள் சற்று விரைவில் கனிந்து விடலாம். சில முயற்சிகள் சற்றுத் தாமதித்துக் கனியலாம். கனியும் காலத்தைச் சுருக்குவதும் பெருக்குவதும் நம் கையில் இல்லை. ஆனால் தொடர்ந்து மட்டும் முயன்றால் முயற்சி கனிவது உறுதி. அதற்காக அவசரப்படக்கூடாது. முதிருமுன்னர் முட்டையை உடைத்துப் பார்த்தாலோ, பாதகம் விளையுமே ஒழிய பயன் விளையாது; அதுபோல முயற்சி முதிருமுன்னர் அதனைக் கெடுத்துவிடக் கூடாது. அவசரக்காரர்கள் இப்படித்தான் பொறுமையில்லாமல் எதையாவது செய்து காரியத்தைக் கெடுத்துக் கொண்டு விடுகிறார்கள்.

முயற்சியில் எடுத்ததும் வெற்றி பெற்றுவிட வேண்டும் என்று எதிர்பார்ப்பது அறிவீனமாகும். பிஞ்சு விட்டதும் அது கனிய வேண்டும், முட்டை வைத்த அன்றே குஞ்சாக வேண்டும் என்று எதிர்பார்ப்பது போன்றதே ஆகும் அது. அவசரப்படுவதால் எதுவுமே நடந்துவிடாது. ஆனால் நன்மை விளையாதது உறுதி என்றாலும் தீமை விளைவது நிச்சயம். "அவசரம் புயல் சூறாவளி போன்றது. அது உடைக்கும். மோதிச் சிதைக்கும்" என்கிறார் புலவர். "அறிவற்ற அவசரம் தவறுக்குச் செல்லும் நேரடிப் பாதையாகும்" என்கிறார் மோலியர். "பெரும் அவசரம் பெரும் வீணடிப்பாகும்" என்கிறார் பிராங்களின். "அவசரத்தைப்போல் அவ்வளவு மோசமானது எதுவுமே கிடையாது" என்கிறார் எமர்சன்.

"வெற்றியை விரைவில் கண்டுவிட வேண்டும்" என்று அவசரப்பட்டுச் செயலாற்றும்போது பல தவறுகளைச் செய்யவும் ஏது ஏற்பட்டு விடுகிறது. அதனால்தான், "அவசரம் தன் கால்களுக்குத்தானே தளையிட்டுக் கொள்கிறது" என்று

சொன்னார் செனேகா. இப்படி அவசரப்பட்டு, அதனால் தவறுகள் செய்து விடும்போது ஒரு நாளில் முடியக்கூடிய வேலைக்கு ஒன்பது நாள் தேவைப்பட்டு விடுகிறது. அதனால்தான் "அதிக அவசரம் என்பது எப்பொழுதுமே மிக மோசமான வேகம்" என்று கூறினார் சர்ச்சில்.

அவசரப்படுவது அறிவீனம் மட்டும் அல்ல, அது ஒருவிதப் பலவீனமும் ஆகும். அதனால்தான் கோல்டன், "அவசரம் பலவீன மனங்களின் அடையாளம்" என்று சொன்னார்.

“அவசரக்காரனுக்குப் புத்தி மட்டு” என்று நம் நாட்டிலும் கூறுவர். அறிவுள்ளவன்கூட அவசரப்படும் போது அறிவை இழந்து விடுகிறான். அவசரப்படும் போது அவன் பரபரப்படைகிறான். அதனால் உணர்ச்சி மேலோங்கி, அறிவு பின்தங்கி விடுகிறது. அப்பொழுது தான் அவன் தன்னையு மறியாமல் பல தவறுகளைச் செய்து விடுகிறான். பதறிய காரியம் சிதறும் அல்லவா?

மனிதன் இருநிலைகளில்தான் பொறுமை இழக்கின்றான். ஒன்று தாமதிக்கும்போது, மற்றொன்று துன்பங்கள் முற்படும்போது. அவ்வித நிலைகளில் அவசரப்படாது பொறுமையோடு இருப்பது அவசியம். அவ்விதம் இருப்பவருக்கே வெற்றிக் கனி கிடைக்கும் என்பதில் என்ன ஐயம்? வெற்றி உடனேயும் வரலாம். தாமதித்தும் வரலாம். எளிதாகவும் வந்து விடலாம். கடினமாகவும் கிடைக்கலாம்; அதையெல்லாம் நாம் பொருட்படுத்தவே கூடாது. நம் குறியெல்லாம் வெற்றி ஒன்றிலே இருக்க வேண்டும். அதனை அடைவதற்குத் தளரா முயற்சி மட்டுமே நாம் செய்ய வேண்டியது. டால்ஸ்டாயின் "போரும் அமைதியும்" என்னும் நவீனம் உலகப் புகழ் பெற்றிருக்கிறது. அதற்குக் காரணம் என்ன? அவர் அதனை முப்பத்தைந்து முறை திருத்தி எழுதினார். ஆயிரத்திற்கும் அதிகமான பக்கங்களுள்ள அந்த நவீனத்தை முப்பத்தைந்து முறை எழுதி முடிக்க எவ்வளவு காலம் ஆகி இருக்கும். எவ்வளவு கடின உழைப்புத் தேவைப்பட்டிருக்கும். ஆனால் அவற்றையெல்லாம் அவர்

பொருட் படுத்தினாரா? இல்லவே இல்லை. அந்த நவீனம் உலகு புகழும் உன்னத நவீனமாயிருக்க வேண்டும். அது அவர் குறி, அந்தக் குறியை அடைய ஏற்பட்ட தாமதமோ, துன்பமோ அவரை ஒரு சிறிதும் பாதிக்கவில்லை. அவர் பண்பட்டு விட்டதனால்.

விடா முயற்சியின் அடுத்த விரோதி எதனையும் ஆழமில்லாமல் மேலெழுந்தவாரியாகச் செய்யும் தன்மையாகும். பாம்பைக் கொல்ல வேண்டுமாயின் ஓங்கி அடிக்க வேண்டும். அதேபோல் முயற்சியில் வெற்றி பெற வேண்டுமாயின் அதனைத் தீவிரமாகச் செய்ய வேண்டும். குழி தோண்ட வேண்டுமாயின் மண் வெட்டியை ஓங்கிப் போட வேண்டாமா? எடுத்த முயற்சி எதனையும் அரையும் குறையுமாய் செய்வதனால் வெற்றி வெகு தொலை விலகிச் சென்று விடுகிறது. கனமான பொருள்களைத் தூக்க வேண்டுமாயின் நாம் நம்மிடமுள்ள ஆற்றலைத் திரட்டி முயலவல்லவா வேண்டும். அதற்குமாறாக பொதுவாகத் தொடுவதும் இலேசாகத் தூக்கிப் பார்ப்பதும், பிறகு "முடியாது கனமாயிருக்கிறது" என்று சொல்லிக் கொண்டும் இருந்தால் நம்மால் ஒருபோதும் அதனைத் தூக்க முடியாது. முயற்சிக்கு நம்முடைய முழுக் கவனமும், முழுத் திறனும், முழு வலிமையும் தேவை. அரைகுறை கவனத்தையும், திறனையும், வலிமையையும் செலுத்துவோமாயின் நிச்சயம் நம்மால் வெல்ல முடியாது. இரும்பு உருக அதற்கேற்ற வெப்பம் வேண்டாமா? விறகு தரும் வெப்பத்தில் இரும்பு உருகி விடுமோ? அதற்கு நிலக்கரி அல்லவா வேண்டும். அதேபோல் முயற்சி வெற்றி பெற வேண்டுமானால் அதற்கு வேண்டிய அளவு கவனம், திறன், வலிமை அல்லவா தேவை. அவற்றை நாம் வழங்காது எப்படி நாம் வெற்றியை மட்டும் எதிர்பார்ப்பது?

விடா முயற்சியின் அடுத்த விரோதி அளவுக்கதிகமான உற்சாகம். "அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாகும்" என்பது மிகப்பெரும் உண்மையாகும். உணவு, உயிருக்கு உறுதி சேர்ப்பதுதான். ஆனால் அதுவே அளவுக்கு

அதிகமாகிவிடின் உயிருக்கு இறுதி உண்டு பண்ணி விடுகிறதே.

செயல் வெற்றிக்கு உற்சாகம் அவசியம்தான், ஆனால் அது அளவை மீறிவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அளவை மீறும்போது அமுதும் நஞ்சாகி விடுவதுபோல் அளவைக் கடக்கும்போது உற்சாகம் ஆபத்தாக மாறிவிடுகிறது. ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் காட்டு என்று கூறிய அண்ணலைத் தாம் யூதர்கள் கொன்றிடவும் துணிந்தார்கள். அதற்கு காரணம் என்ன? ஏசு பெருமான் அளவுக்கு மீறிய நல்லவராக இருந்தது. காந்தியடிகள் இறந்தது கேட்டு பெர்னாட்ஷா அனுப்பிய அனுதாபச் செய்தியில் இருந்ததெல்லாம் இதுதான். "அவர் அளவுக்கு மீறிய நல்லவராக இருந்தார்" அதன் பலன்தான் இது என்று ஷா சொல்லாமல் சொன்னார்.

அளவுக்கு அதிகமாக உற்சாகம் கொள்ளும்போது அறிவு கொஞ்சம் பின் தள்ளப்பட்டு விடுகிறது. அதனால் நாம் வேலையின் தன்மையைப் பாரபட்சமின்றிப் பார்க்க முடிவதில்லை. ஒரு குறிப்பிட்ட வேலை பற்றி ஒரு தவறான கருத்தை மனத்தில் உண்டு பண்ணி கொள்கிறோம். அந்த தவறான கருத்துப்படி செயலாற்றுகின்றோம். அதனால் விளையக்கூடிய தீமை நம்முடைய அளவற்ற உற்சாகத்தில் தெரிவதில்லை. இதனால் தவறுகள் செய்து நாமே தீமை செய்துகொண்டு விடுகிறோம். எவராவது நாம் செய்ய ஏதுவான தவறுகளை நமக்கு அந்நிலையில் சுட்டிக் காட்டினாலும் நாம் ஏற்றுக் கொள்வதில்லை. நம் மனம்தான் அளவற்ற உற்சாகம் என்னும் மாயையால் போர்த்தப்பட்டிருக்கிறதே, அதனால் நம்மால் உண்மையைக் கண்டு கொள்ள முடிவதில்லை. அதனால் தோல்வியில் போய் மோதிக்கொண்ட பின்னர்தான், நமக்கு அறிவுத் தெளிவு ஏற்படுகிறது. உண்மை ஒன்றை அறிந்து கொள்வதற்கு நாம் அளிக்கும் விலை மிகவும் அதிகமாகி விடுகிறது.

இவ்வித உற்சாகிகள் எடுத்ததும் மிகவும் தீவிரமாக

வேலை செய்து, தோல்வியை அணைத்துக் கொண்டதும் துவண்டு போய்விடுவார்கள். சோடா புட்டியைத் திறந்ததும் "உஸ்" என்று சப்தம் செய்துவிட்டு அதன்பின் அமைந்து விடுகிறதல்லவா? அதைப்போல் தவறான மனநிலையில், அறிவைப் பயன்படுத்தாமல் அளவற்ற உற்சாகத்துடன் வேலை செய்து தோல்வி ஏற்பட்டதும் அப்படியே உட்கார்ந்து விடுவார்கள். முயற்சியைத் தொடர்ந்து செய்யுமாறு அவர்களை எவரும் எழுப்பிவிட முடியாது. முன்பிருந்த உற்சாகத்திற்கு நேர் எதிராக இருக்கும் அவர்களின் இப்போதைய நிலை.

அளவுக்கதிகமான உற்சாகத்துடன் வேலை செய்பவர்கள் வெகு விரைவில் களைத்துப் போய் விடுகிறார்கள். செயல் வெற்றிக்குத் தொடர்ந்து முயற்சியாற்றி கொண்டிருப்பது அவசியம். உலையிலிருந்து பழுக்கக் காய்ச்சி வெளியே எடுத்த இரும்பின்மீது தொடர்ந்து அடி கொடுத்தால்தான் நாம் விரும்பும் உருவம் அதற்குக் கொடுக்க முடியும். அடி கொடுத்து ஒரு மணி நேரத்திற்குப்பின் மறு அடி கொடுத்தால் அதன் உருவத்தை மாற்ற முடியுமா? இரண்டாவது அடி கொடுப்பதற்குள் அது ஆறிப் போய்விடும். அதுபோல் முயற்சி தொடர்ந்து புரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் இவ்விதம் அளவற்ற உற்சாகம் கொண்டு சிறிது நேரம் வேலை செய்து களைத்துப்போய் விடுபவருக்குத் தொடர்ந்து வேலை செய்ய முடியாது.

களைப்படையாமலே வேலை செய்தாலே தொடர்ந்து வேலை செய்ய முடியும். இடைவிடாத, தொடர்ந்த உழைப்பு பல வேலைகளுக்குத் தேவைப்படும். நாம் அடிக்கடி களைத்து போய்விட்டால் என்ன செய்வது? எனவே, நம்மிடம் இருக்கும் வலிமையை அளவோடு பயன்படுத்தி வேலை செய்ய வேண்டும். அளவற்ற உற்சாகம், நம்மிடம் இருக்கும் வலிமைக்கு வடிகாலிடுவதாகும்.

முயற்சியைச் சீராக, நிதானமாகச் செய்வது அவசியம். குதிரையைக் காலிலுள்ள முள்ளினால் குத்தினால் ஓடும். பிறகு

அயரும், மறுபடியும் குத்தினால் மறுபடியும் ஓடும். இப்படி இருக்கக் கூடாது நம் முயற்சி. அது ஒரே வேகமாக இருக்க வேண்டும். அளவுக்கு அதிகமானதாகவும் இருக்கக் கூடாது. அளவுக்கு குறைவானதாகவும் இருக்கக்கூடாது. தவளை தாவுவதைப்போல் இல்லாமல் "கேல்லப்ஸ்" என்று கூறப்படும் குதிரை ஓட்டம் போல் இருக்க வேண்டும்.

விடா முயற்சியின் அடுத்த விரோதி தீர்மானமில்லாத் தன்மையாகும். ஒரு விஷயத்தில் தீர்மானத்திற்கு வரவேண்டியது அவசியமாகும். தீர்மானத்திற்கு வரச் சிலருக்கு இயலுவதில்லை. சிலருக்கு ஒரு தீர்மானத்திற்கு வருவதற்கு போதிய துணிவு இருப்பதில்லை; உண்மையில் எந்த விஷயத்திலும் ஒரு தீர்மானத்திற்கு வருவது ஒரு பொறுப்புள்ள, ஆழ்ந்து சிந்தித்துச் செய்ய வேண்டிய செயல்தான். ஏனெனில், அந்தத் தீர்மானத்தின் விளைவு நன்மையாகவும் இருக்கலாம், தீமையாகவும் இருக்கலாம். அதற்காகத் தீர்மானத்திற்கு வரவே தயங்குவது கோழைத்தனமாகும்.

சாலையில் செல்லும்போது எத்தனையோ ஆபத்துக்கள் வரலாம்தான், அதற்காக வீட்டை விட்டே வெளிக் கிளம்பாமல் இருக்க முடியுமா? வீட்டிற்குள் இருக்கும்போதும் அபாயம் வராது என்று என்ன நிச்சயம்? அதற்காக வேண்டி வீட்டை விட்டு ஓடிவிடுவதா? உயிர் வாழும்போது அபாயங்கள் நேரலாம் என்று கருதி உயிரை மாய்த்துக் கொள்வதா? உலகம் அழியப் போகிறது என்று சில இத்தாலியர்கள் சில ஆண்டுகளுக்கு முன் தெரிவித்தபோது அதனைக் கேட்டு அஞ்சிய ஓர் இளைஞன் தற்கொலை புரிந்து கொண்டானாம்.

அதற்காக, சிந்தியாமல் ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டாம்! நன்கு அமைதியாகச் சிந்தித்து, அவசரப்படாமல் ஆய்ந்து தீர்மானத்திற்கு வரலாம். ஓரளவுதான் நாம் வரக்கூடிய துன்பங்களை ஊகித்து எதிர்பார்க்க முடியும். அதற்கு மேற்பட்டவை பற்றி நாம் கவலைப்படக்கூடாது. நம்மால் இயன்ற ஒன்றிற்காகக் கவலைப்படலாம். இயலாததற்காகக் கவலைப்பட

முடியுமா? பாம்பால் வரும் அபாயம் பற்றிக் கவலைப் படலாம். அணுகுண்டுப் போரால் விளையும் அபாயம் பற்றி நாம் கவலைப்பட்டுப் பயன் என்ன? அது நம் ஆற்றலுக்கு அப்பாற்பட்டது. எனவே, அது பற்றிய கவலை நமக்கு வேண்டியதில்லை. முயற்சியாலும், நம்மால் ஊகிக்க முடிந்த சங்கடங்களைத் தவிர்ப்பதற்கு தவறுகளை நிவர்த்திப்பதற்கு வழி காணலாம். அதற்கு அப்பாற்பட்டவை பற்றி என்ன செய்வது? எனவே, இயன்ற மட்டும் சிந்திக்கலாம். திடமான மனநிலையுடன், மன ஒருமைப்பாட்டுடன் சிந்திக்கலாம். இவ்விதம் சிந்திக்கும் போது நாம் நல்ல தீர்மானத்திற்கு வரமுடியும்.

தீர்மானத்திற்கு வருமுன்னர் சுற்றிலுமுள்ளவற்றை நன்கு பார்த்து முடிவுக்கு வரலாம். அவ்வாறு பார்த்துக் கண்டவற்றின் அடிப்படை மீது அமைக்கலாம் நம் தீர்மானத்தை, அவ்விதம் பார்ப்பதற்கு மன ஒருமை தேவை. மன ஒருமையுடன் பார்த்தால்தான் நமக்கு உண்மை விளங்க முடியும். மனத்தை அலைய விட்டுக் கொண்டு பார்க்கும்போது எதிரே வரும் ஆள் கூட யார் என்று தெரியாது. மனத்தை ஒருமைப்படுத்திப் பார்க்கும்போது தான் ஒன்றிய நன்மை, தீமை நன்கு தெரியவரும். அவ்விதம் அறிந்தவற்றை மனத்தில் கொண்டு ஒரு தீர்மானத்திற்கு வந்தால்தான் அது சரியாக இருக்கும்.

தீர்மானமே செய்யத் தயங்குவதைப்போல, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒரு தீர்மானத்திற்கு வரத் தயங்குவதும் மிகப்பெரும் தீமையாகும். ஒரு நோயாளிக்கு அபாய நிலை ஏற்பட்டு விட்டால் அப்பொழுது மருத்துவர் "சட்"டென ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டுமல்லவா? அந்தச் சமயத்தில் அவசரம் கூடாது. நிதானம் வேண்டுமென்று தாமதிப்பதோ அல்லது செய்யும் முடிவின் பலன் யாதாயிருக்குமோ என்று அஞ்சுவதோ அதனால் தயங்குவதோ மிகவும் பலவீன நிலைகளாகும்.

இன்னும் சிலர் இருக்கிறார்கள், அவர்களும் இப்படித்தான். தீர்மானத்திற்கு வரத் தயங்குவர். ஆனால் ஒரு வேறுபாடு.

முன்னவர்களுக்கு எந்தத் தீர்மானத்திற்கும் வருவது இயலாததாயிருக்கும். ஆனால் பின்னவர்களுக்கு இரண்டுமே அழகாகத் தோன்றும். எதைத் தேர்வது. இப்படித் தீர்மானிப்போமா அப்படித் தீர்மானிப்போமா என்று தயக்கம் ஏற்படும். இரண்டும் கவர்ச்சியாய் இருப்பதே இவர்களின் தயக்கத்திற்குக் காரணமாகும். கழுதை ஒன்றிருந்தது, அதன் இரு பக்கங்களிலும் புல் கிடந்தது. இரண்டுமே கவர்ச்சியாகத் தோன்றியது அதற்கு. எனவே, ஒரு முடிவுக்கு வர முடியாமல் இரண்டையுமே சாப்பிடாமல் பட்டினி கிடந்தே இறந்து போய்விட்டது.

சில கடைகளில் வாடிக்கைக்காரர்கள் முன் சாமான்களை அள்ளிப் போடுவர். ஆனால் இன்னும் சில கடைகளில் குறிப்பிட்ட ரகங்களை மட்டுமே காட்டுவர். வேறு உண்டா என்று கேட்டாலும் இல்லை என்று கூறுவர். ஆனால் உண்மையில் வேறு ரகங்கள் இருக்கத்தான் செய்யும். அவர்கள் காட்டுவதில்லை. அதற்குக் காரணம் இதுதான். வந்தவர்கள் எதை வாங்குவது, எல்லாம் தாம் நன்றாக இருக்கின்றன என்று ஒரு தீர்மானத்திற்கு வர முடியாமல் திணறுவார்கள். அதனால் வந்தவர்களுக்கும் சிரமம், கடைக்காரர்களுக்கும் விரைவில் வியாபாரம் நடக்காது. அதனால்தான், "தீர்மானமின்மை ஓராயிரம் பயங்களை உண்டு பண்ணுகிறது" என்று மார்ட்டினும், "அவசரத்தை விடவும் கூட மிகப் பெரும் தீமையாகும் தீர்மானமின்மை" என்று பெல்தாகும் கூறுகின்றனர்.



# 5. விடா முயற்சியும் பிடிவாதமும்

விடா முயற்சி வேறு, பிடிவாதம் வேறு. ஒன்று வைரம் என்று சொன்னால் பிறிதொன்றை கரி என்று கூறவேண்டும். வைரம்தான் கரியாகிறது என்பது உண்மை. ஆனால் வைரமும் கரியும் ஒன்றல்ல. இரண்டிற்கும் இடையில் அகன்ற இடைவெளி உண்டு. அதைப் போலவே விடா முயற்சியும், பிடிவாதமும், விடா முயற்சி அளவை மீறும்போதுதான் அது பிடிவாதமாக மாறிவிடுகிறது, என்றாலும் இது வேறுதான். அது வேறுதான். இதன் தன்மை வேறுதான். அதன் தன்மை வேறுதான். இதன் பலன் வேறுதான். அதன் பலன் வேறுதான்.

இனிப்பு அதிகமாகும்போதுதான் கைப்பாக ஆகிவிடுகிறது. இருளைப் போக்குவதுதான் வெளிச்சம். ஆனால், அளவுக்கதிகமான வெளிச்சம் நம் கண்மீது பாய்ச்சப்படும்போது அது நம் பார்வைக்கு பொருள்களை விளக்குவதற்குப் பதிலாக நம் பார்வையிலிருந்து பொருளை விலக்கி விடுகிறது. நமக்கு வேண்டியது இனிப்பாயிருக்கும் இனிப்புத்தான். நாம் வேண்டுவது பொருள்களை விளக்கும் வெளிச்சம் தான், பொருள்களை விலக்கும் வெளிச்சமல்ல. நமக்கு வேண்டியது விடா முயற்சிதான், பிடிவாதமல்ல. நமக்குத் தேவையானது வைரம்தான் கரியல்ல.

விடா முயற்சியையும் பிடிவாதத்தையும் வேறுபடுத்துவது முயற்சியின் அளவு, அதற்கு அடுத்தபடியானது தீர்மானிக்கும் தன்மை, விடா முயற்சியுள்ள ஒருவன் சுற்றியிருப்பவற்றைப் பார்த்து, தெரிந்து, சிந்தித்து, அவை பற்றிய முழு விவரத்தையும் அறிந்து கொள்கிறான். அவ்விதம் முழு விவரமும் தெரிந்து கொள்ளாதவரை அவன் அந்த முயற்சியில் ஈடுபடத் தீர்மானிக்க மாட்டான். அவை பற்றித் தானறிந்தது மட்டுமல்லாமல் பிறரிடமும் கேட்டறிய அவன் தயங்கமாட்டான். அவ்விதம் கேட்டறியாதவரை முயற்சியில் முனைய மாட்டான். பிறர் கூறும் எந்த மறுப்பையும் அவன் மிகவும் கவனத்துடன் கேட்பான். அது

அவன் கொண்டிருக்கும் கருத்திற்கு மாறானதாயிருந்தாலும் அவன் முகம் கோணமாட்டான். எல்லாவற்றையும் கேட்டறிந்து அமைதியாக இருந்து அவர்கள் கூறியதில் உள்ள நன்மை தீமைகளைப் பாரபட்சமின்றி ஆராய்வான். தன் கருத்து தவறு என்று கண்டால் திருத்திக் கொள்ள அவன் கணமும் தயங்க மாட்டான். அதில் அவன் போலி கௌரவம் பாராட்டிக் கொள்ளமாட்டான். பிறர் கூறிய கருத்து, தன் கருத்தினும் மேலானதாயிருப்பின் அவன் அதனை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்வான். அவனுக்கு வேண்டியது செயல் வெற்றிதாமே ஒழிய போலி கௌரவமல்ல.

ஆனால் பிடிவாதக்காரன் தன்மை இதற்கு முற்றிலும் மாறானதாயிருக்கும். அவன் பிறர் கூறும் கருத்தை ஏற்றுக் கொள்ளமாட்டான். பிறர் கூறும் கருத்து, தன் கருத்திற்கு ஏற்றதாயிருந்தால்தான் எடுத்துக் கொள்வான். மாற்றமாயிருந்தால் செவியும் கொடுக்க மாட்டான். அது பற்றிச் சிந்திக்கவும் மாட்டான். அவன் தொடங்கப்போகும் முயற்சியிலுள்ள தவறுகளையும், அதனால் விளையப் போகும் விபரீதங்களையும் எடுத்துக் கூறி எச்சரிக்கும் எந்தக் குரலையும் அவன் பொருட்படுத்த மாட்டான். அவன் செவி திரும்பும் அவன் கொண்டிருக்கும் கருத்து கூறப்பட்டால், அவன் சிந்தனை திரும்பும் அவன் கொண்டிருக்கும் கருத்திற்கு ஒத்து கூறப்பட்டால், இவ்விதம் அவன் தானாகவும் அறியாமல், பிறர் கூறியும் கேளாமல் தவறான முயற்சியில் இறங்கித் துன்பத்திற்கும், தோல்விக்கும் தன்னை இலக்காக்கிக் கொள்வான்.

இவன் இவ்விதம் பிறர் கூறும் கருத்தை ஏற்காததற்குக் காரணம் கர்வமும் அதனால் பிறக்கும் போலி கௌரவமும் தவறான மன நிலைதான்; மனிதன் குறையுள்ளவன் என்னும் உண்மையை அறியாத "அறிவாளி" இவன். இதனால் அவன் தன்னாலும் தவறு செய்ய இயலும் என நம்புவதில்லை. பிறர் எடுத்துக் காட்டினாலும் ஏற்றுக் கொள்வதில்லை. பிறர் இவன்

தவற்றை எடுத்துக் காட்டியதும் இவன் தன் தன்மானம் தாக்கப்பட்டதாய் உணர்கிறான். அதன்பின் இவனால் அறிவோடு சிந்திக்க இயலாமற் போய்விடுகிறது. "ஆமாம் இவர் ரொம்பக் கண்டு விட்டார்" என்று கூறிப் பிறர் பேச்சைத் தூக்கி எறிந்து விடுகிறான். மீண்டும் கூறினாலோ இவனுக்கு ஒரு வகை வெறியே ஏற்பட்டு விடுகிறது. "எவர் என்ன சொன்னாலும் என் பிரியப்படி செய்தே தீருவேன்" என்று மார்தட்டி விடுகிறான்.

உண்மையில் நம்மைத் தவிர்த்து உலகிலுள்ள மக்கள் அனைவரும் மூடர்கள் அல்லர், அவர்கள் கூறுவதிலும் உண்மை இருக்கலாம் என்று இவன் எண்ணி அவர்கள் கூறுவதை இவன் எடுத்துக் கொள்வதில்லை. ஆல்பர்ட் ஈன்ஸ்டீனுக்குத் தோன்றாத ஒரு கருத்தை அவர் வீட்டுப் பணிப்பெண் எடுத்துக் கூறினாள். ஒரு நாள் ஆல்பர்ட் ஈன்ஸ்டீன் கனப்புச் சட்டி அருகில் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது சூடு அதிகமாக இருப்பது போல் அவருக்குத் தோன்றியது. "உடனே வந்து கனப்புச் சட்டியை நகர்த்தி வை!" என்று அவர் பணிப்பெண்ணைப் பார்த்துக் கத்தினார். அவள் அமைதியாகக் கேட்டாள். "தாங்கள் தாம் சற்று நகர்ந்து இருந்து கொண்டால் என்ன?" என்று. அந்த எண்ணம் தமக்கு ஏற்படவேயில்லை என்று ஆல்பர்ட் ஈன்ஸ்டீன் ஒப்புக் கொண்டார். சாதாரண மக்கள் கூடச் சில வேளைகளில் நல்ல கருத்தைக் கூறிவிடுவதும் உண்டு. அவர்கள் சாதாரண மக்கள் என்பதற்காக ஏற்று கொள்ளாவிடில் அதனால் பாதகம் அடையப்போவது அவர்கள் அல்லர், இவன்தான்.

விடா முயற்சியுள்ளவன் பிறரின் வெற்றியை உடனே அங்கீகரிப்பான். பிறர் பெறும் வெற்றிகள் இவனை ஊக்குவிப்பவையாக இருக்கும். அவர்கள் வெற்றி பெற்றபோது நான் ஏன் பெறக்கூடாது என்று அவன் எண்ணுவான். ஆனால் பிடிவாதக்காரன் பிறரின் வெற்றியை ஒப்புக் கொள்ளமாட்டான். இவன் மனதில் அழுக்காறு நிறைந்திருக்கும். அதனால் பிறரின்

வெற்றிக்கு ஏதாவது குறை கண்டுபிடித்து அதனை போவோர், வருவோரிடம் கூறிக் கொண்டே திரிவான்.

பிறர் வெற்றியை அங்கீகரிக்கும்போதுதான் அவர்கள் வெற்றி அடைவதற்கான காரணங்களை ஆழ்ந்தறிய முடியும். அந்தக் காரணங்களை ஆதாரமாகக் கொண்டு அவனும் வெற்றி பெற ஏதுவாகும். ஆனால் இவன் பிறர் வெற்றியை அங்கீகரியாததால் அவர்களின் வெற்றிக்கான காரணங்களை ஆய்ந்து பார்க்க மாட்டான். அதனால் இவனுக்கும் வெற்றிக்கும் வெகு தொலை என்றாகி விடும்.

விடா முயற்சியுள்ளவன் தான் தொடங்கிய முயற்சி தவறானது, அதில் வெற்றி பெறுவது அரிது என்று கண்டால் மறு சிந்தனை செய்யத் தயங்க மாட்டான். முயற்சியில் ஓரளவு வரை மறு சிந்தனை செய்வதில் தவறில்லை. ஆனால் பிடிவாதக்காரன் தனக்கே தவறு என்று பட்டாலும் அந்த முயற்சியை அத்துடன் விடமாட்டான். எவரும் என்ன சொல்வார்களோ என்று ஓர் எண்ணமும் இவனுக்கு ஏற்பட்டு விடுவது உண்டு.

இயன்ற முயற்சியில் இறங்கி, விடாது முயலுவான் விடா முயற்சிக்காரன். இயலாத செயலில் ஈடுபட்டுத் தானாகவும் அறியாது பிறர் பேச்சை கவனியாது முயலுவான் பிடிவாதக்காரன்.

பிடிவாதக்காரனின் பிடிவாதத்தைக் குணப்படுத்த குறைகளை எடுத்துக் குத்திக் காட்டக் கூடாது. அவ்வாறு காட்டினால் அவன் பிடிவாதம் கூடுமே ஒழியக் குறையாது. எனவே, பிடிவாதக்காரனிடம் நம் கருத்தை எடுத்துச் சொல்லி அவன் கருத்தைக் குத்திக் காட்டாமல் அவனுடன் அன்பாகப் பேசி அவன் கருத்திற்கு முற்றிலும் மாற்றமில்லாத கருத்தொன்றைக் கூறி அவனைக் கவர வேண்டும். அப்பொழுதுதான் அவன் நம் கருத்தை ஏற்றுக் கொள்வான். அவன் தன் கருத்திலிருந்து விலகுவதாகவோ அவனை அவன் கருத்திலிருந்து நாம் விலக்குவதாகவோ அவன் உணரக்கூடாது.

பிடிவாதக்காரனிடம் போய், "உன் கருத்து தவறு, அதனை விட்டு விடு!" என்று கூறுவதைப்போல் ஒரு முடச் செயல் வேறொன்றுமில்லை. அவன் மனத்தில் அழுந்தித் தடம் பதிந்து கிடக்கும் ஒரு கருத்தை அவ்வளவு எளிதில் நாம் அகற்ற முயலுவது அறிவீனமாகும். அது நிச்சயமாக நோயைக் குணப்படுத்துவதற்குப் பதிலாக அதிகப்படுத்தி விடும்.

இறுதியாக ஒன்று கூறுவேன். பிடிவாதம் ஒருவனை, ஒருவனின் வாழ்வை, ஒருவனின் முன்னேற்றத்தை முடமாக்கிவிடும் வாதமாகும். ஆனால் முயற்சியோ ஒருவனை வானளாவ உயர்த்திச் செல்லும் ஏணியாகும். விடா முயற்சியும் பிடிவாதமும் பார்வைக்கு ஒன்றுபோல் தோன்றிய போதினும் விடா முயற்சி கற்கண்டு, பிடிவாதம் படிக்காரம்.

வேதனையின்றி வெற்றி இல்லை. சோதனையின்றி சாதனை இல்லை. எனவே, விடா முயற்சியுடன் செயலாற்றி எட்டாத சிகரங்களையெல்லாம் எட்டிப் பிடித்து வாழ்வில் வாகை சூடுவோமாக! வெற்றி நமதே!

# பொருளடக்கம்

## நூல் விவரப் பட்டியல்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | விடாமுயற்சி வெற்றிக்கு வழி |
| ஆசிரியர் | : | அப்துற்-றஹீம் |
| உரிமை | : | M.R.M. முஹம்மது முஸ்தபா |
| மொழி | : | தமிழ் |
| முதல் பதிப்பு | : | ஜனவரி 1963 |
| ஒன்பதாம் பதிப்பு | : | மே 2005 |
| நூலின் அளவு | : | 1/8 கிரவுன் |
| பக்கங்கள் | : | 80 |
| விலை | : | ரூ. 16-00 |
| ஒளி அச்சுக்கோர்வை | : | *மாஜி கிராஃபிக்ஸ்*<br>சென்னை-600 001.<br>போன் : 25249905 |
| வெளியீடு | : | *சுலைமானியா பப்ளிஷர்ஸ்*<br>மஃமூர் சென்டர், முதல் மாடி,<br>81, அங்கப்பன் தெரு, த.பெ.:1886<br>சென்னை - 600 001.<br>போன் : 252 70 550 |
| அச்சிட்டோர் | : | *மாஹின் பிரிண்டர்ஸ்*<br>28, அப்பு மேஸ்திரி தெரு,<br>சென்னை - 600 001.<br>போன் : 25225143 |